

# முற்போக்குடைய இளந் தாய்மார்கள் மேலும் மேலும் உபயோகிப்பது

# விவா ஏனெனில் இதில்

போஷாக்குக் கொடுக்கும் அதிகப் பால்
சக்தியைப் பெருக்கும் கூடுதல் மால்ட்
பாட்டிலுக்கு அதிகக் கோப்பைகள்

# விவா

கொடுத்து செயல் திறமையை வளர்க்கும் ஆரோக்கியப் பானம்

ViVA
The Action Packed Health Drink
FOR SUSTAINED GOOD HEALTH



ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

ASP/JIL-5/76 TAM C

# பிறந்த நாள் விழா- பிறரை இனிக்கவைக்கும் திருவிழா!

பிறந்தநாள் விழாவில அனைவரும் சுவைத்து மகிழ்வதற்கென்றே பாரியின் மிட்டாய் வகைகள்: சாக்லேட் எக்ளேர்கள், கோகநட் எக்ளேர்கள், பைன் ஆப்பிள் லிக்கர்கள், ஆரஞ்சு லிக்கர்கள், லாக்டோ பான் பான்கள் மற்றும் ஆரஞ்சு கேண்டிகள்.




**வாழ்வில் இனிமை விரைந்து**
**பரவிடவே-பாரீஸ்**

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்
சென்னை 600 001

PRS 2142

ஆடையில்
பெண்மையின்
இழையோடும் போது
பெண்மைப் பேரழகு
புன்னகை புரியும்!

நிச்சயமாக, மபத்லால் க்ரூப்
அளிப்பவை நேர்த்தியான
துணிமணிகள்தான்!




TM

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்கில்
# உங்கள் டிபாசிட்டுகளுக்கு
# அதிகப்படி வட்டி
# கிடைக்கிறது




சதவிகிதம் கூடுதலான வட்டி
5 வருடங்கள் வரையிலுள்ள
டெர்ம் டிபாஸிட்டுகளுக்கு




சதவிகிதம் கூடுதலான வட்டி
சேமிப்பு கணக்குகளுக்கு

கீழ்கண்ட அட்டவணையை கவனமாகப் படியுங்கள்:

| | | | |
|---|---|---|---|
| சேமிப்புக் கணக்குகள் | 5¼% | 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 6¼% |
| டெர்ம் டிபாஸிட்டுகள் | | 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 7¼% |
| 14 நாட்கள் வரை | வட்டி இல்லை | 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 8¼% |
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¼% | 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | 9¼% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¾% | 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10% |
| 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 5¼% | | |

ரெகெரிங் டிபாசிட்டுகளுக்கும் தக்கபடி அதிக வட்டி அளிக்கின்றன.

எங்கள் பாங்குக்கு விஜயம் செய்யுங்கள் —
எங்களது அன்பார்ந்த சேவை உங்களுக்கு திருப்தி அளிக்கும்.




## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: "ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006

இந்தியா மற்றும் வெளி நாடுகளில் எல்லா முக்கிய நகரங்களிலும்
எமது கிளைக் காரியாலயங்களும், தொடர்பாளர்களும் உண்டு

20- அம்ச திட்டம்

## அம்சம்: 17

ஆண்டு வருவாய் ரூ. 8,000 வரை வருமான வரியிலிருந்து விலக்கு.




20- அம்ச திட்டம்

## அம்சம்: 18

விடுதியில் தங்கிப் படிக்கும் மாணவர்களுக்குக் கட்டுப்படுத்தப்பட்ட விலைகளில் இன்றியமையாப் பண்டங்களை வழங்குதல்.



## 20-அம்ச திட்டம்

### அம்சம்: 19

மாணவர்களுக்குக் கட்டுப்படுத்தப்பட்ட விலைகளில் பாடப்புத்தகங்கள், நோட்டுகள் மற்றும் பள்ளிக்குத் தேவையான பொருள்கள் வழங்குதல் — புத்தக வங்கிகள் அமைத்தல்.




## 20-அம்ச திட்டம்

### அம்சம்: 20

எல்லா மக்களுக்கும் — குறிப்பாக எளிய மக்களுக்கு — வேலைவாய்ப்பையும் பயிற்சி முறையையும் விரிவாக்குவதற்கு உதவித்தொகையுடன் கூடிய புதிய பயிற்சித் திட்டம்.





வெளியீடு:
இயக்குநர்: செய்தி, மக்கள் தொடர்புத் துறை,
தமிழ்நாடு அரசு, சென்னை-600 009

# அமுல்—உங்கள் பால்க்காரர்



# அமுல்—உங்கள் தேநீர்க்காரர்



¼ லிட்டர் டம்ளரில் 2½ டேபிள்ஸ்பூன் அமுல் மில்க் பவுடரை நன்கு குவியச் செய்து போடவும். சிறிதளவு சுடுநீருடன் கலந்து நன்கு கலக்கிப் பசைபோல் ஆக்கிக்கொள்ளவும். பின் அதன் மேல் வரை சுடு நீரை மேலும் சேர்த்து நன்கு கலக்கவும். உங்கள் குழந்தைக்கான க்ளாஸ் அளவு பால் தயார்! (முழுமையான விவரங்களுக்கு டின் மீது பார்க்கவும்.) அமுல் மில்க் பவுடர் தேயிலை பானத்திற்கும் காப்பிக்கும் கூட மிக ஏற்றதாகும்.

# அமுல்—உங்கள் தயிர்க்காரர்



கறந்த பாலிற்குச் செய்வது போலவே, மேற்கண்ட முறைப்படி பாலைச்செய்து, சாதாரணமாகச் செய்வது போலத் தயிராகத் தோய்க்கவும்.




# அமுல்

## மில்க் பவுடர்

### வீட்டினுள் இயங்கும் ஒரு பால் பண்ணை



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோவாப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த

RADEUS/AMP-I

பெண்கள் என்றாலே 'குறிப்பிட்ட' சில
தினங்களில் அசௌகரியமும்
வேதனையும் ஏற்படுவது சகஜம்.

அமைதியற்ற 'குறிப்பிட்ட' இக்காட்
களில் மனச்சோர்வும் அயர்ச்சியும்
ஏற்படக்கூடும். கவலை வேண்டாம்.
ஸாரிடான் உங்களுக்கு
உறுதுணையாக இருக்கும்.
அதன் விசேட
கலவைமுறை
வலியிலிருந்து
உங்களுக்கு
நிவாரணமளித்து,
மனச்சோர்வை அகற்றி,
அமைதியூட்டிப்
புத்துணர்ச்சியளிக்கிறது.
இங்குதான் ரோஷின்
சர்வதேச ஆராய்ச்சி
உங்களுக்காக செயல்
படுகிறது.





ஒரே ஒரு **ஸாரிடான்** போதும்

ட்ரேட்மார்க் 'ரோஷ்'

HT-RP. 8613

# போடு புதிர்!



பார்ப்பதற்கு ஒரே மாதிரியான 8 பந்துகள் உள்ளன. அவற்றில் ஒரு பந்து மட்டும் சற்றுக் கூடுத லான எடை உள்ளது. ஒரு தராசு கொடுக்கப்பட்டுள்ளது. எடைக் கற்கள் கிடையாது. இரு தடவைகள் மட்டும் தான் அந்தத் தராசைப் பயன்படுத்த லாம். கூடுதலான எடை உள்ள பந்தை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள் ?

- ஆர். சேதுமாதவி.

விடை: இரண்டு பந்துகளைத் தனியாக எடுத்து வைத்துவிடவும். தராசின் தட்டுகளில் மூன்று மூன்று பந்துகளை வைத்து எடை பார்க்கவும். (இது தராசை முதல் தடவையாகப் பயன்படுத்துவது.) ஒரு தட்டு கீழே சென்றால் அதில் உள்ள மூன்று பந்துகளிலிருந்து ஏதாவது ஒன்றைத் தனியே எடுத்துவிட்டு மீதி 2ல் ஒவ்வொன்றை ஒவ்வொரு தட்டில் வைத்து நிறுக்கவும். (இது தராசை இரண்டாவது தடவையாகப் பயன்படுத்துவது). இப்பொழுது ஏதாவது ஒரு தட்டு கீழே சென்றால் அதுதான் எடை கூடுதலான பந்து. இரு தட்டுகளும் சமமாக நின்றால் தனியே எடுத்து வைத்த பந்துதான் எடை கூடுதலானது. தராசை முதல் தடவையாகப் பயன்படுத்தும் பொழுதே இரு தட்டுகளும் சமமாக நின்றால் இரண்டாவது தடவையில் முதலில் ஒதுக்கி வைத்த இரண்டு பந்துகளையும் தட்டுக்கு ஒன்றாக வைத்து எடை பார்க்கவும். இதில் எந்தத் தட்டு கீழே செல்கிறதோ அதில் உள்ளது தான் எடை கூடுதலான பந்து.



# கல்கி

நள ஆவணி 6 – ஆகஸ்டு 22, '76

# உங்கள் விருப்பமான

# ஆல்விடோன்

## புதுக்கோலத்தோடு வருகிறது!




வலிமைக்கும், புத்துணர்வுக்கும
சுவைமிக்க ஊட்டமளிக்கும் பானம்

உங்கள் அருகிலுள்ள கடையில்
தேவைக்கேற்ப கிடைக்கிறது.

இப்போது, கையடக்கமான
225 கிராம் பாட்டிலிலும்
கிடைக்கிறது.

## உங்களுக்கும்,
## உங்கள் குடும்பத்தினருக்கும்
## அருமையான சுவை விருந்தாகும்.

கவனத்தோடு தயாரிப்பவர்கள் :

**ஆல்விடோன் லாபரட்டரீஸ்**

சென்னை-600 043

KRIPAMA.AL. 601



# சென்னை டி.வி.யின் ஆண்டு நிறைவு!



திரு முரளிதரன்

சென்ற ஆகஸ்ட் மாதம் பதினைந்தாம் தேதி, சுமார் பத்து கிலோ மீட்டர் தூரத்தையே எட்டும் சக்தியுடன் ஆரம்பிக்கப்பட்ட டெலிவிஷன் நிலையம் இப்போது தொண்ணூறு கிலோமீட்டர் தூரத்தில் வசிப்பவரை எட்டிப் பிடிக்கும் திறனைப் பெற்று விட்டது.

அதிகார பூர்வமான 'எட்டும் தூரம்' தொண்ணூறு கிலோ மீட்டர் என்றாலும் நூற்றைம்பது கிலோமீட்டர் தூரத்தில் வசிக்கும் வசதியான நபர்களுக்கும் இந்த 'தூரதர்சன்' காட்சிகளைக் காணும் அதிருஷ்டம் அடித்திருக்கிறது.

சென்னை டெலிவிஷன் நிலைய இயக்குனர் திரு முரளிதரன் கூறுகிறார்: ''இந்த ஆண்டு சுதந்திர தினத்திலிருந்து சென்னை நிலைய நிகழ்ச்சிகளைப் பெரிதும் விரிவுபடுத்தியிருக்கிறோம். குறிப்பாகக் கிராமப் பகுதி மக்களுக்கு உபயோகமாகும்படி விவசாய நிகழ்ச்சிகள், கிராமிய பாணி பொழுதுபோக்குச் சித்திரங்கள் முதலியவற்றை அளிக்க ஏற்பாடாகியிருக்கிறது. தெலுங்கு, கன்னட, மலையாள, ஹிந்தி நிகழ்ச்சிகள் தயாரித்து வழங்கவும் திட்டம். 'ஒலியும் ஒளியும்' நிகழ்ச்சியை இதுவரை இரவு 7 மணிக்கும் 7–40க்கும் கொடுத்து வந்தோம். இது படிக்கும் சிறுவர் சிறுமியர் கவனத்தை அதிகமாகத் தன்பால் கவர்கிறது என்று பல பெற்றோர்கள் குறிப்பிட்டதால், அதை இரவு ஒன்பதே காலுக்கு வழங்குவது என்றும் தீர்மானித்திருக்கிறோம்.

நாடகத் துறையில் பொறுப்பேற்றிருப்பவர் திரு கோபாலி. இதில் பிரதான ஃப்ளோர் மானேஜராகப் பணியாற்றும் திரு ராமன், ''திரைப் படத்தில் ஒரு காட்சி சரியாக அமையவில்லை என்றால், 'ரீ-டேக்' எடுத்துச் சமாளிக்கலாம். டி. வி.யில் ரீ-டேக், எடிட்டிங் முதலியவை சாத்தியமல்ல. நாடகத்தை டி. வி. காமிராக்கள் படமாக்கும்போது நடிகர்கள் வசனத்தை இசகு பிசகாகச் சொல்லி விட்டால், மீண்டும் ஆரம்பத்திலிருந்து தொடங்க வேண்டும். நடிகர்கள் காமிரா முன் நடிக்கும்போது, அவர்கள் லைட், மைக், முதலியவற்றுக்கு ஏற்பவும் தங்கள் தங்கள் அசைவுகளைக் கட்டுப்படுத்தி நின்று பேச வேண்டும். அவர்களை அப்படிச் செய்ய வைக்க எங்களிடம் பல சங்கேத கையசைப்பு பாஷைகள் உண்டு. இதையும் ஒத்திகையில்போதே சொல்லிக் கொடுத்து விடுவோம்'' என்கிறார் ராமன். சென்ற ஆண்டு ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி டெலிவிஷன் நிலையம் தொடங்கப்பட்டபோது ஒரு பிரபல பாடகியின் அரை மணி நேர இசைக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். விசேஷ அழைப்பாளர்கள் முன்னிலையில் நடக்கவிருந்த அந்த இசைக் கச்சேரி நிகழ்ச்சியை அப்படியே டி. வி. படமெடுத்து உடனே ஒளிபரப்ப ஏற்பாடாகியிருந்தது.

சரியாக முப்பது நிமிடங்கள் அந்த அம்மையார் பாட வேண்டும் என்று ஏற்பாடு.

ஏதோ நினைவில் அந்த அம்மையார் கச்சேரியை இருபத்தி நான்காவது நிமிடத்தில் முடித்து விட்டார். காமிராக்கள் வேலை செய்து கொண்டேயிருக்கின்றன.

"''இன்னும் ஆறு நிமிடங்கள் பாக்கி! தொடர்ந்து பாடுங்கள்!'' என்று சொல்ல அது என்ன கல்யாணக் கச்சேரியா? இரைந்து சொன்னால் அதுவும் எல்லார் வீட்டிலும் கேட்குமே! அந்த அம்மையாரை அணுகினால், அவர் உருவமும் திடீரென்று எல்லா டெலிவிஷன்களிலும் தெரியுமே!... ஃப்ளோர் மானேஜர் ராமன் கண் இமைக்கும் நேரத்தில் கீழே படுத்து உருண்டவாறே பாடகி





## ஒலிம்பிக் ரஸத் துளிகள்!

○ ஒலிம்பிக் பந்தயம் ஆரம்பிப்பதற்கு முன்னால் ஓர் ஆண் ஓட்ட வீரர் ஒலிம்பிக் தீயை ஏற்றி வைப்பார். இந்த மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் முதல் தடவையாக ஓர் ஆண், ஒரு பெண் ஓட்ட வீரர்கள் ஒலிம்பிக் தீயை ஏற்றி வைத்தனர். சமத்துவம்.

○ மாண்ட்ரியால் உணவு நிலையத்தில் காணப்பட்ட அறிவிப்பு: "மூன்று மணி நேரத்துக்கு முன்னால் தகவல் தெரிவித்தால் தங்கப் பதக்கம் பெற்றதைக் கொண்டாட "கேக்" செய்து தரப்படும்!"

○ கனடியப் பெண்மணி லாரோக்கி ஒரு தையல் இயந்திரத்துடன் மிக சுறுசுறுப்பாக ஒலிம்பிக் பந்தய வீரர்களுக்குக் கிழிந்த துணிகளைத் தைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். "என்னிடம் கிழிசலைத் தைத்துப் போக ருஷ்ய வீரர்கள் மட்டும் வரவில்லை" என்று குறைப்பட்டுக் கொண்டார்!

○ ஒலிம்பிக் பந்தயத்தில் எல்லோரது கவனத்தையும் கவர்ந்தவர் ரோமேனிய ஜிம்னாஸிய வீராங்கனை நாடியா கோமனிசி. இவளுக்குப் பதினான்கு வயது. எல்லோரது கவனமும் தன் பக்கம் திரும்புவதைக் கண்டு நாடியா கூச்சப்பட்டாள்.

பேட்டியாளர் அவளை மொய்த்துவிட்டபோது அவள் பளிச்சென்று சொன்ன பதில்: "நான் ஒலிம்பிக்குக்கு ஜிம்னாஸியப் பயிற்சி மட்டும் கற்றுக் கொண்டு வந்தேன். என்னைப் பேட்டிக்குத் தயார் படுத்திக் கொண்டு வரவில்லை!"

○ ஒலிம்பிக் கிராமத்தில் விளையாட்டு வீரர்கள் தங்கள் பந்தயத்துக்கான பொருள்களைப் பத்திரமாகப் பாதுகாப்பதில் கவனம் செலுத்தினர். காரணம் இல்லாமலா? விஷமம் ஏதும் நிகழ்ந்து விடக் கூடாதே என்றுதான்!

ஆதாரம்: இண்டர் நேஷனல் ஹெரால்ட் ட்ரிப்யூன்

-குண்டுமணி

அமர்ந்திருக்கும் மேடையை அணுகிக் கடிகாரத்தைக் கட்டிக் காட்டி ஆறு விரல்களையும் காண்பித்தார். அவர் உருவம் காமிராவில் விழாமல் தப்பவே 'அங்கப் பிரதட்சிணம்!'

பாடகியும் நிலைமையைப் புரிந்துகொண்டு தொடர்ந்து பாடிக் கச்சிதமாக முப்பதாவது நிமிடத்தில் முடித்தார்.

இதற்கு நேர் மாறான சம்பவமும் நிகழ்ந்திருக்கிறது ஒரு முறை.

திரைப் படக் காட்சிக்கு இடையிடையே விளக்கம் தரவேண்டியது அந்தப் பெண்மணியின் பொறுப்பு.

காமிரா முன் போய் நின்று அந்தப் பெண்மணி பேச ஆரம்பித்தாள். திடீரென்று மயக்கமடைந்து கீழே விழுந்து விட்டாள். கொஞ்சம்கூட எதிர்பாராத விஷயம். நிலையத்தில் அந்த நேரத்தில் இருந்த பெண்மணிகள் எப்படியோ கீழே தவழ்ந்து போய் அந்தப் பெண்மணியை அங்கிருந்து அகற்றி மயக்கம் தெளிவித்தார்கள்.

ஆனால் அந்தப் பெண்மணியின் வீட்டில் டி. வி. செட் முன் அமர்ந்து ரசித்துக்கொண்டிருந்தவர்கள், அந்தப் பெண்மணி கீழே விழுந்ததையும் அதே டி. வி. செட்டில் பார்த்துப் பதறிப்போய் டி. வி. நிலையத்துக்கு ஓடி வந்தார்கள்! அன்றையத் திரைப்பட நிகழ்ச்சி அதற்குமேல் விளக்கம் ஏதும் இல்லாமல் ஓடி முடிந்தது.

தவணை முறையில் டி. வி. விற்கும் பிரபல வி. ஜி. பி. நிறுவனத்தைச் சேர்ந்த திரு வி. ஜி. சந்தோஷம் கூறுகிறார்:

"தொண்ணூறு சதவிகிதப் பார்வையாளர்கள் நகரவாசிகள். அதிலும் பல மொழி பேசுபவர்கள் என்பதை நினைவில் வைத்துக் கொண்டு நிகழ்ச்சிகளைத் தயாரித்தால் இன்னும் பொதுமக்களுக்கு டி. வி.யில் ஈடுபாடு ஏற்படும். மேலும் வரி விகிதம் கிட்டத்தட்ட ஒரு செட் விலையில் ஐந்தில் ஒரு பங்கு வந்து விடுகிறது. இதைக் கணிசமான அளவில் குறைக்க அரசாங்கம் வழி செய்தால் பொதுமக்கள் கூடுதலாக டி.வி. செட்களை வாங்குவார்கள்.

"சில பாங்குகள், டி. வி. செட் வாங்க முன்பணம் கொடுத்து உதவுவது வரவேற்கப்படவேண்டிய விஷயம். ஆனால் இந்தச் சலுகை மாதச் சம்பளம் வாங்குபவர்களுக்கு மாத்திரம்தான் கிடைக்கிறது."

திரு சேஷு பாபு, டி. வி. இன்ஜினீயர்:

"டி. வி. செட்டுகளை நிதானத்துடனும் பொறுப்புடனும் கையாள வேண்டும். சில செட்டுகளில் படம் வராது ஒலி மாத்திரம் வரும். இதன் காரணம் 'ஆன்டென்னு'வில் இருக்கும். சில சமயங்களில் பறவைகள் உட்கார்ந்தால்கூட 'ஆன்டென்னு'வின் திசை மாறும். இதைச் சரி செய்ய வேண்டும். சில சமயங்களில் ஒலித் தொடர்பு விட்டுப் போகும். படம் மட்டும் தெரியும். இதை விஷயம் தெரிந்தவர்கள் கவனிக்க வேண்டும். காட்பாடியில் உள்ள ஒரு டி. வி. செட்டில் படம் நன்றாகத் தெரியும். அதே நேரத்தில் பக்கத்திலுள்ள வேலூரில் படம் தடுமாறும். இதற்கு இயற்கைச் சூழ்நிலை காரணம். வேலூரைச் சுற்றி ஒரே குன்றுகள்! இவை ஒலி அலையைப் பாதிக்கும். இங்கே 'பூஸ்டர்கள்' என்று சொல்லப்படும் உபரிக் கருவிகள் உபயோகிக்கலாம்."

"நான் டி. வி. செட் வாங்கியிருக்கிறேன். பெருமையாகத்தான் இருக்கிறது. 'சோஷல் ஸ்டேடஸ்' உயர்ந்து விட்டதாகக் கூடக் கொஞ்சம் கர்வம்தான். ஏதோ அவகாசம் இருக்கிறபோது நல்ல நிகழ்ச்சிகளாக இருந்தால் பார்ப்பேன். ஆனால் ஏதாவது ஞாயிற்றுக் கிழமை மாலை வேளைகளில் ஒரு கல்யாண வரவேற்புக்கோ, பீச்சுக்கோ கிளம்பும்போது பக்கத்து வீட்டு அன்பர் வந்து 'சார்! சீக்கிரம் திரும்புவேளா?' என்று அக்கறையாக விசாரிக்கும் வயிற்றெரிச்சல் இருக்கிறதே! அது தான் சார் சகிக்கலே!" என்கிறார் திருநாதிரிப்பேட்டை அருணாசலம்!

இந்த ஜூலை மாதம் முடியச் சென்னை நகரில் மாத்திரம் 7998 டி. வி. லைசென்ஸ்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. —**கோமதிசுவாமிநாதன்**

GEMINI

# ஜெமினி டீ

## தேயிலைச் சுவையிலே ராஜ திலகம்






இதோ, செழுமைத் தேயிலை ஜெமினி.
நாவிலே நறுமண 'தர்பார்'—
கெட்டித் தேநீர் தந்திடும் ராசி—எனவே
கோப்பைகள் அதிகம் அளித்திடும்.
கொண்டாடத் தக்க சிக்கனம் இது.
ஜமாய்த்துப் பருகுவீர் இனி—

**ஜெமினி டீ**

**டாடா-ஃபின்லே படைப்பு**




கூட்டு சேரா நாடுகளிடையே
கூட்டு!


தமிழ் நாடு எக்ஸ்பிரஸ்
கமலாபதி


நெல் விலையை அதிகமாக்கணும்!..
வேண்டாம்!.. வேண்டவே வேண்டாம்!
ஐயோ.. என் பாடு...

# குடும்ப நலனே தேச நலன்

'மூப்பது கோடி ஜனங்களின் சங்கம்' என்று பாடினார் பாரதியார். அது நாற்பதாயிற்று, ஐம்பதாயிற்று இன்று அறுபது கோடிக்கும் அதிகமாகப் போய் விட்டது.

பாரதம் சுதந்திரம் பெற்ற பிறகு மக்களின் ஆரோக்கிய வாழ்வில் அரசாங்கம் அதிக அக்கறை எடுத்துக்கொள்ளத் தொடங்கியது இயல்பே. இதன் விளைவாக மரண விகிதங்கள் கணிசமாகக் குறையலாயின. அதே நேரத்தில் ஜனன மரண விகிதங்களுக்கு இடையேயுள்ள வித்தியாசம் அதிகமாகி ஜனத்தொகை வெகு வேகமாகப் பெருகலாயிற்று.

ஆண்டொன்றுக்குக் கிட்டத்தட்ட ஒன்றேகால் கோடி என்ற அளவில் ஜனத்தொகை கூடுகிறது. இந்த நூற்றுண்டின் இறுதியில் பாரதத்தில் நூறு கோடிக்கும் அதிகமான மக்கள் வாழ்வார்கள், அல்லது வாழ முயன்றுகொண்டிருப்பார்கள்.

ஆம்! வாழ்க்கை அத்தனை கடினமானதாகத்தான் ஆகிவிடும். எவ்வளவுதான் சுஜகர்ணம் போட்டுப் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாடுபட்டாலும், பயனிராது. கிடைக்கும் சுபிட்சம் மலையத்தனை இருப்பினும் அதனைப் பகிர்ந்து கொள்ளக் கடலத்தனை மக்கள் இருப்பார்கள். மலை இருக்குமிடம் தெரியாமல் மூழ்கியே போகும்!

எனவே இன்று தேச பக்தி உள்ள ஒரு குடும்பத் தலைவனின் முதல் பணி தன் குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்துவதே. இதற்கு ஜாதி, மதம், பொருளாதார ஏற்றத் தாழ்வு போன்ற எந்த அம்சமும் தடையாக நிற்கக் கூடாது.

இந்திய இஸ்லாமியர் பலர் குடும்பக் கட்டுப்பாடு இஸ்லாமிய மார்க்கத்துக்குப் புறம்பானது என்று எண்ணுவதை டாக்டர் டி. அம்ருதீன் அஹம்மத் எடுத்துக் காட்டி, இந்தக் கருத்து தவறானது என்று விளக்கியும் இருக்கிறார். திருச்சி அகில இந்திய ரேடியோ ஒலிபரப்பிய இந்த அறிஞரின் கருத்துக்கள் இஸ்லாமிய சகோதரர்களின் கவனத்துக்குரியது.

டாக்டர் அஹம்மத் கூறுகிறார்:

''நபிகள் நாயகம், சிறு வருவாய் உள்ளவர்கள் பல குழந்தைகளைப் பெறுவது மிகவும் துரதிர்ஷ்டமானது என்று அருளியுள்ளார். இது ஹதீஸில் வருகிறது.

''மேலும் முஸ்லிம் சட்ட வல்லுனர்கள் கருத்தரித்த 120 நாட்களுக்குள் கருக் கலைப்பதற்கு மருந்து சாப்பிடலாமெனத் தீர்மானித்துள்ளார்கள். எகிப்து நாட்டின் முப்தியான ஷேக் அப்துல் மாஜித்ஸலிம் அவர்கள் கருத்தடுப்பு மருந்துகளை உபயோகிக்கலாம் என 1937ம் வருடமே தீர்ப்பு அளித்துள்ளார்கள். அவர் 25-1-1937ம் ஆண்டு அளித்த பத்வா எனும் மார்க்கத் தீர்ப்பில் 'புருஷன் மனைவி இவ்விருவரில் எவரேனும் விரும்பினுல் கருத்தரிப்பதைத் தடுக்கும் முறைகளை அனுசரிக்கலாம்' எனக் கூறியுள்ளார்கள்.

''இன்று அநேகம் முஸ்லிம் நாடுகள் குடும்பக் கட்டுப்பாடு முறையை ஏற்றுக் கொண்டு அதற்குரிய திட்டங்களைச் செயல்படுத்தி வருகின்றன. இவ்வகையில் முஸ்லிம் நாடுகளான இந்தோனேஷியா, பாகிஸ்தான், எகிப்து, துருக்கி, ஈரான், பங்களாதேஷ், மலேஷியா, மொராக்கோ, ஈராக், டுனிஷியா ஆகியவற்றைக் கூறலாம்.

''நமது அண்டை முஸ்லிம் நாடான பாகிஸ்தான் அரசாங்க ரீதியிலே 1960ம் ஆண்டிலேயே குடும்பக் கட்டுப்பாடு முறையை ஏற்றுச் செயல்பட்டு வருகிறது. உலக முஸ்லிம் நாடுகளிலேயே இந்தியாவில் முஸ்லிம் ஜனத்தொகை மூன்ருவது இடம் வகிக்கிறது. ஆகையால் இந்திய முஸ்லிம்கள் குடும்பக் கட்டுப்பாடுமுறையை ஏற்றுச் செயல்படுவதுதான் பாரத நாட்டுக்கு மட்டுமின்றி அதன் முஸ்லிம் சமுதாயத்துக்கும் நல்லது.''

தயங்காமல் நல்ல அறிவுரை வழங்கிய டாக்டர் அம்ருதீன் அஹம்மத் அவர்களை வாழ்த்துகிறோம்.

இந்திய முஸ்லிம்களின் தேசபக்தி, வேறு எந்த மதத்தவரின் தேச பக்தியை விடச் சிறிதளவும் குறைவுபட்டதல்ல.

கல்கி மலர் 36 இதழ் 4



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

இதனை அவர்கள் நிரூபித்துக் காட்ட வேண்டிய தருணம் வந்திருக்கிறது.

ஊருக்கு உபதேசம் என்றில்லாமல் முஸ்லிம் சகோதரர்களுக்கு விடுக்கும் வேண்டுகோளை மற்ற மதத்தவரும் தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டித்துக் குடும்ப நலனுக்கும் அதன் தொடர்பான தேச நலனுக்கும் அடிகோல வேண்டும்.

# மக்ஸைஸாய் பரிசுகள்

வங்க எழுத்தாளர் சோம்புமித்ரா வாழ்க்கையோடு இயைந்த அற்புதமான நாடகங்களை எழுதித் தயாரித்து அவற்றில் நடித்தும் இருக்கிறார். புதியதொரு நாடக இயக்கத்தையே தோற்றுவித்தார்.

1948 வரை தொழில் நடிகராக விளங்கியவர் அதன் பின் லாப நோக்கமில்லாத ஒரு நாடகக் குழுவை ஆரம்பித்தார். இக்குழுவினர் கலைக்காகவே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டனர்.

வழக்கமான பாணியிலிருந்து மாறுபட்டிருந்ததாலேயே இந்நாடகக் குழுவினருக்குப் பலத்த எதிர்ப்பும் பல இடையூறுகளும் ஏற்பட்டன. அவற்றைப் பொருட்படுத்தாமல் உயர்தரமான நாடகங்களையே தயாரித்து மக்களின் ரசனையை வளர்த்ததுடன் உலகின் கவனத்தையும் ஈர்த்துவிட்டார் சோம்பு மித்ரா. இல்லாமலா மக்ஸைஸாய் நிறுவனத்தின் விருதும் பத்தாயிரம் அமெரிக்க டாலர் பரிசும் அவரை இந்த ஆண்டு தேடி வந்திருக்கின்றன? மித்ராவின் முயற்சிகளுக்குப் பக்கபலமாக இருந்தவர் அவர் மனைவி திருப்தி. இது தமிழ்ப் பெயரல்லதான் என்றாலும் இப்பெயரின் தமிழ் அர்த்தத்துக்கு ஏற்ப இந்நடிகை கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடைந்து கலை உயர்வுக்காகவே கணவருடன் சேர்ந்து பாடுபட்டார். பல காலம் இவர்கள் வெறும் காய்கறி, டீ ஆகியன உண்பதுடன் திருப்தி அடைய வேண்டியிருந்தது! ஆனால் இன்றோ மக்ஸைஸாய் விருது இவர்களை வந்ததில் கலை உலகம் அடைந்துள்ள திருப்தி அளவிட முடியாதது.

பாரதத்தில் கனரகத் தொழில்கள் பலப்பல நிறுவப்படுவதும் அவை பற்றி அதிகமாகப் பேசுவதும் எழுதுவதும் இன்று சகஜமாக இருக்கிறது. ஆனால் 1938ம் ஆண்டிலேயே அதன் தேவையை உணர்ந்து இங்கு செயலாற்றியவர் ஒரு டேனிஷ்காரர்! ஹென்னிங் ஹால்க் லார்ஸன், ஒரு கூட்டாளியுடன் சேர்ந்து லார்ஸன் அண்டு டூப்ரோ என்ற நிறுவனத்தை ஏற்படுத்தினார். இன்று இந்த நிறுவனம் உலகப் பிரசித்தி பெற்று விளங்குவதுடன் இந்தியாவின் தொழில் வர்த்தக முன்னேற்றத்தில் கணிசமான பங்கும் வகித்து வருகிறது. ஸ்தாபகர் ஹென்னிங் ஹால்க் லார்ஸன் இவ்வாண்டு மாக்ஸைஸாய் நிறுவன விருது பெறும் மற்றொரு நபர்.

நமது வாழ்த்துக்களை இரு பெரியோர்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

ராஜாஜி சிந்தனை

## கோபம் தணிந்தது

பல வருஷங்களுக்கு முன் சேலம் நகரசபையில் இரண்டு பஞ்சமர்கள் ஊழியராய் இருந்தனர். அவர்களுடைய வேலை நகரத்தின் சில பகுதிகளிலிருந்த குழாய்களுக்குத் தண்ணீர் வரும்படி மூடு குழாய்களைத் தினந்தோறும் திறப்பதும் மூடுவதும்தான். நகரசபை இன்ஜினியர் மற்றவர்களை வார்டு மாற்றும் வழக்கத்தை அனுசரித்து அவர்களையும் பிராமண அக்கிரகார வார்டுக்கு மாற்றினார். இந்த மாற்றம் நடந்ததும் அக்கிரகாரத்தில் பெருத்த கிளர்ச்சி ஏற்பட்டது. பிராமணர்கள் எல்லோரும் என்மீது கோபம் கொண்டார்கள். சீறினார்கள். வாதம் செய்தார்கள்.

ஆனால் நான் அசைந்து கொடுக்கவில்லை. "நீங்கள் உங்கள் மதத்தையும் மதானுஷ்டானங்களையும் உங்கள் வீட்டுக்குள்ளேயே வைதத்துக்கொள்ள வேண்டுமே யன்றி நகரசபை விஷயத்தில் தலையிடலாகாது. நகரசபையானது ஜாதி வேற்றுமை பாராட்ட முடியாது" என்று நான் கூறினேன்.

சிறிது காலம் சென்ற பின் அரசியல் சீர்திருத்த விசாரணையின்போது பார்லிமெண்டுக் கூட்டுக் கமிட்டியின் முன் ஒருவர், "இந்தியா தேசத்தில் ஏராளமான ஜாதிகளும் வித்தியாசங்களும் இருப்பதால் இங்கே ஜனநாயகம் முன்னேறுவது முடியாத காரியம்" என்று கூறினார். அப்போது அங்கிருந்த திரு டி. கே. பால் சேலத்தைச் சேர்ந்தவர். அவர் உடனே கமிட்டியாரிடம், "அப்படியில்லை; ஒரு நகரசபைத் தலைவர் பிராமணர். அவர் தமது ஆட்சியில் ஜாதி வித்தியாசத்தை ஒழிக்கும் விஷயத்தில் வெற்றி பெற்றிருக்கிறார். இந்தியா முன்போலில்லை; இப்போது மாறியே வருகிறது" என்று சொன்னார். சேலத்து பிராமண நண்பர்களும் இதைச் செவியுற்றார்கள். ஆனால் அவர்கள் இப்போது கோபம் அடையவில்லை. சந்தோஷமே அடைந்தார்கள். நான் பிடிவாதமாக இருந்தது நல்லது என்றே எண்ணினார்கள்.

'தீண்டாமை' என்ற கட்டுரையில்




வேதம் என்றாலே முதலில் ஞாபகம் வருவது யாகம்தான். யாகமும் தியாகமும் ஒன்றுதான். இங்கிலீஷில்கூட யாகம், தியாகம் இரண்டையும் 'ஸாக்ரிஃபைஸ்' என்று தானே சொல்கிறார்கள்? ஆனதால், வைதிகம் என்பது தன்னலமே கருதுவது என்கிற அபிப்பிராயம் அடியோடு பிசகு. தன்னலத்தை முழுக்கத் தியாகம் பண்ணுவதுதான் ஸநாதன தர்மத்தின் லட்சியம்.

யாகத்திலே நெருப்பில் வஸ்துக்களை, உடைமைகளைப் போட்டுத் தியாகம் பண்ணினால் தேவ சக்திகளுக்குப் பிரீதி உண்டாகிறது. அவர்கள் லோகத்துக்கு மழை, சுபிட்சம், நல்ல எண்ணம் எல்லாவற்றையும் அநுக்கிரகம் பண்ணுகிறார்கள். தன் உடைமையைத் தியாகம் பண்ணி இப்படி லோக க்ஷேமத்தைச் செய்ய வேண்டும்.

சொத்து சுதந்திரங்களை நாமே வைத்துக் கொண்டு அநுபவிப்பதில் பெறுகிற சுகம் ரொம்பவும் தாற்காலிகமானது. இந்தத் தாற்காலிக சுகம் நித்ய சௌக்யமான ஆத்மாபிவிருத்திக்கே ஹானியாகவும் ஆகிறது. ஆனால் இதே உடைமைகளை நாம் வைத்துக் கொண்டு அநுபவிப்பதை விட, **கொடுத்து அநுபவித்தால்**, இதுவே பரம ஆனந்தத்தைத் தருகிறது; சாச்வத சௌக்கியத்துக்கும் வழி கோலுகிறது. இதனால்தான் உபநிஷத்துக்களில் முதலாவதான ''ஈசாவாஸ்யத்''தில் முதல் மந்திரத்திலேயே, ''தியாகம் பண்ணி அநுபவி'' என்று சொல்லியிருக்கிறது. காந்திகூட இதில்தான் தம்முடைய ஃபிலாஸஃபி முழுக்க இருக்கிறது என்று சொல்லி, இந்த உபநிஷத்தைத் தலைக்கு மேலே வைத்துக் கொண்டு சிலாகித்து வந்தார்.

கொடுக்க வேண்டும். அதுதான் தியாகம். அதைத்தான் வேதம் எங்கே பார்த்தாலும் வற்புறுத்துகிறது. எந்தக் கர்மாவும் செய்து முடிக்கும்போது, ''நான்தான் கர்த்தா என்பதால் இதன் பிரயோஜனம் முழுதும் எனக்கே வந்துவிடப் போகிறதே; அப்படி என் ஒருத்தனுக்கு மட்டும் பலன் கிடைத்துவிடக் கூடாது'' என்கிற பரம தியாக புத்தியில் ''ந மம'' – ''எனதில்லை; எனக்கில்லை'' என்று அதன் பலனை லோக க்ஷேமார்த்தம் தியாகம் பண்ணச் சொல்கிறது, நம்முடைய மதம்.

மற்ற வஸ்துக்களைக் கொடுத்து விட்டு, ''நான் கொடுத்தேன்'' என்ற எண்ணத்தை மட்டும் வைத்துக் கொண்டே இருந்தால் இந்த அகங்காரமானது தியாகத்தாலும் தானத்தாலும் கிடைக்கிற ஆத்மாபிவிருத்தியை அப்படியே ஏப்பம் விட்டுவிடும். தியாகம் பண்ண வேண்டும்; அதைவிட முக்கியமாகத் தியாகம் பண்ணினேன் என்ற எண்ணத்தையும் தியாகம் பண்ணிவிட வேண்டும்.

மகாபலி நிறையக் கொடுத்தான்; வாரி வாரிக் கொடுத்தான். ஆனால் நான் கொடுக்கிறேன் என்ற அகங்காரத்தை அவன் பகவானுக்குப் பலி கொடுக்கவில்லை. இதனால் தான் பகவானே அவனைப் பாதாளத்துக்கு அமுத்தும்படியாயிற்று.

''ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு வெளியில் ஏதேதோ பண்ணிக் கொண்டு, அகங்காரத்தைக் கரைக்காமல் இருந்தால் இவனுக்கும் பிரயோஜனமில்லை; இவனுடைய ஸர்வீஸால் லோகத்துக்கும் பிரயோஜனமிராது. தாற்காலிகமாக ஏதோ நன்மை நடந்தது போல் படாடோபமாகத் தெரியலாம்; ஆனால் அது நின்று நிலைத்து விளங்காது.

''என்பும் உரியர் பிறர்க்கு'' என்று குறள் சொன்ன மாதிரி தங்களுடைய ஸர்வத்தையும் பரோபகாரமாகத் தியாகம் பண்ண வேண்டும். சிபியின் கதை எல்லோருக்கும் தெரியும். ஒரு புறாவுக்காகத் தன் சரீரத்தையே, பிராணனையே தியாகம் செய்ய முற்பட்ட மகாபுருஷன் அவன். நம் மதத்தில் ஜீவகாருண்யத்துக்குத் தந்திருக்கிற முக்கியமான ஸ்தானத்துக்கு சிபி கதை ஒன்றே போதும். வேத பூமியான இந்தப் பாரத பூமியின் விசேஷம் மனுஷ்யனுக்காக மட்டுமில்லாமல் மற்ற ஜீவராசிகளுக்கும், பூச்சி பொட்டுகளுக்கும்கூட க்ஷேமத்தைக் கோரித் தியாகம் பண்ணச் சொல்வது; இதில் இன்னொரு பக்கம், இந்த மண்ணின் விசேஷத்தால் மற்ற ஜீவராசிகளுக்கும் கூட இப்படிப்பட்ட பரோபகார சிந்தனையும், தியாக புத்தியும் இருப்பதாகச் சொல்கிற புராண விருத்தாந்தங்கள். புறாவுக்குத் தியாகம் செய்த சிபியைப் பற்றிச் சொன்னேன். புறாக்களே செய்த பரம தியாகத்தைக் ''கபோத உபாக்யானம்'' சொல்கிறது. ''கபோதம்'' என்றால் புறா என்று அர்த்தம். ''உபாக்யானம்'' என்றால் சின்னக் கதை என்று அர்த்தம். இந்தப் புறாக்களின் கதை மனசை ரொம்பவும் உருகச் செய்வது. (தொடரும்)

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**




ரொம்ப நேரம் மணிப் பொத்தானை அழுத்தியதும்தான் கதவு திறந்தது. உடல் முழுவதும் சந்தேகத்துடன் ஓர் ஆசாமி. கதவை அடைத்துக் கொண்டு நின்றான். ''உங்களுக்கு யார் வேண்டும் ?'' என்றான்.

''டாக்டர் அவர்களைப் பார்க்க வேண்டும்'' என்றார் ஆத்மா.

'' முன்பே சொல்லியிருக்கிறீர்களா ?''

''ஆம்.''

''பெயர் ?''

''ஆத்மா.''

''ஒரு நிமிஷம்.'' கதவு மூடிக் கொண்டது. ஆத்மா தம் கைகளை உரைத்துச் சூடாக்கிக் கொண்டார். சந்தடியில்லாத தனியான இடத்தில் வீடு. இங்கிருந்து நாகரிகத்துக்கு இருபது மைல் இருக்கும். பழங்காலத்து வீடு. கட்டடம் சற்று வயதான கட்டடம். கதவு திறந்தது.

''உள்ளே வாருங்கள்.''

உள்ளே பழுத்த ஆப்பிளின் மணமும் வார்னிஷ் மணமும் பெரிதாக வீசின. சிவப்புக் கம்பளம் அங்கங்கே பிராணனை விட்டிருந்தது. ஒரு குட்டி நாய் சாஸ்திரத்துக்கு 'வள்' என்று குரைத்துவிட்டு உடனே வாலை 'விஷ் விஷ்' என்று ஆட்டத் தொடங்கியது. மாடிப் படி மரப் படி முனகியது.

மாடி அறையில் ஒரு நாற்காலியில் ஆத்மாவை உட்கார வைத்துவிட்டு ஒன்றும் தெரிவிக்காமல் காணாமற் போனான் அந்தச் சந்தேகன்.

ஆத்மாவுக்கு அந்த மௌனம் பழக்கமில்லாததாக இருந்தது. எதிரே புத்தக வெள்ளமாக அலமாரிகள். சுவரில் படங்கள்; கவிதை:

Time You old Gypsymar will you not Stay?
Put up your Caravan Just for one day.

செங்கல் நிறத் திரைகளின் ஊடே ஆதி காலத்துச் சூரியன் மஞ்சள் குங்குமத்துடன் தெரிந்தான். சூரியனுக்கும் வயதாகிறது.

''ஹலோ மிஸ்டர், ஆத்மா! நீங்கள் அரை மணி தாமதமாக வந்திருக்கிறீர்கள்.''

டாக்டர் ! இவரா டாக்டர் !

''மன்னிக்கவும். இந்த இடத்தைக் கண்டு பிடிப்பது சிரமமாக இருந்தது.''

''ஆம், கொஞ்சம் தனியான இடமில்லையா ?... வரை படம் கொடுத்திருந்தேனே வருவதற்கு வழிகாட்டி. அது உபயோகப்படவில்லையா ?''

"பட்டது... இருந்தும்... சிரமமாகத்தான் இருந்தது."

"ஒளிந்து கொண்டிருக்கிறேன். இல்லையா? அந்த வரை படத்தைத் தருகிறீர்களா?"

வரை படத்தை வாங்கிக் கிழித்துப் போட்ட டாக்டருக்கு அறுபத்தி சொச்சம் வயசிருக்கும். மண்டையின் முன் பாகம் முழுவதும் வழுக்கை. பழைய ஞாபகத்துக்குக் காதுகளின் அருகேயும் பக்கவாட்டிலும் இரண்டு ரோமத் திட்டுகள். கண்ணாடி மூக்கின் நுனிக்குச் சரிந்திருந்தது. பற்கள் பழுதாகி இருந்தன. தமக்கு ஒவ்வாத பெரிய கோட்டு அணிந்திருந்தார். எதிரே சென்று அந்தத் திரையைத் தளர்த்தி சூரிய வெளிச்சத்தை மறைத்துவிட்டு ஆத்மாவின் அருகில் வந்து உட்கார்ந்தார்.

"சொல்லுங்கள்" என்றார்.

"உங்களைப் பற்றி ஒரு நண்பர் மூலம் கேள்விப்பட்டேன். முதலில் நம்பவில்லை. அதெல்லாம் நடக்குமா, என்ன?"

"உங்கள் நண்பர் என்ன சொன்னார்?"

"அவர் மற்றொருவரிடம் கேள்விப்பட்டதாகச் சொன்னார்..... நண்பருக்கு நேர் அனுபவம் இல்லை என்று தெரிந்தது. எல்லாமே விநோதமாகப்பட்டது எனக்கு..... நேராகப் பலன் கண்டவர்களை இதுவரையில் நான் சந்திக்கவில்லை. ஆனால் அவ்வப்போது உங்கள் பெயர் எங்கள் வட்டாரத்தில் அடிபடுகிறது. அப்புறம் இந்த விநோதமான விளம்பரத்தைப் பார்த்தேன். அது நீங்கள் தரும் விளம்பரம்தான் என்பதே மறைமுகமாகத்தான் தெரிந்தது. 'மனத்தில் நீண்ட நாட்களாக ஆசைப்பட்டது நிறைவேற வேண்டுமா? 6.30லிருந்து 7.30க்குள் கீழ்க்கண்ட எண்ணுக்கு டெலிபோன் செய்யலாம்' நிறையப் பேர் டெலிபோன் செய்திருப்பார்களே.."

"வேலை செய்யுமா?"

"செய்யும்."

"கெடுதல் ஏதாவது நேருமா?"

"கிடையாது.உத்தரவாதமானசிகிச்சை."

"மிஸ்டர் ஆத்மா.... இன்றைய அரசியல் சூழ்நிலையில் என் போன்ற மேதைகளுக்கு இடமில்லை. என் லைசென்ஸைப் பிடுங்கிக்கொண்டு விட்டது இந்த அரசாங்கம். என்னைக் கைது செய்யக் காத்திருக்கிறார்கள்.... ஒரே ஒரு தடவை நிகழ்ந்த விபத்தினால்... அதுவும் மூன்றும் சிகிச்சை பெற்றுக் கொண்டவரின் தவற்றினால் நிகழ்ந்த விபத்தால் நான் தலைமறைவாக வாழ வேண்டியிருக்கிறது....நான் அதிகப் பணம் கேட்பது என் சொந்தச் செலவுக்காக அல்ல. என் ஆராய்ச்சிக்காக...."

"விபத்தா?"

"ஆம், அந்த ஆசாமி இறந்து விட்டார்... நீங்கள் பயப்படாதீர்கள்.... சிகிச்சையின்போது மது அருந்தக் கூடாது என்று படித்துப் படித்துச் சொல்லி எழுதி வாங்கிக்கொண்டேன்! அதை மீறிவிட்டார்.




"அறுபது எழுபது பேர் இலை! அவர்களில் மூன்று பேரைத்தான் இதுவரையில் தேர்ந்தெடுத்திருக்கிறேன். நீங்கள்ஒருவர்."

"ஏன் இந்த மறைமுகம்?"

"அரசாங்க பயம்! மேலும் என் சிகிச்சை பணம் உள்ளவர்கள் மட்டுமே பெறக் கூடிய சிகிச்சை."

"பணம் நிறைய கேட்பீர்களா?"

"கொஞ்சம் அதிகம் என்று சொல்லலாம். அது சிகிச்சையைப் பொறுத்தது."

உட்கொண்ட மது என் மருந்துடன் நிகழ்த்திய ரசாயனப் போராட்டத்தில் அவர் விழுந்துவிட்டார்....

"அந்த மருந்தை எப்பொழுதோ வீசி எறிந்துவிட்டேன். அது வேறு விஷயம்!"

ஆத்மா தம் மார்பைச் சொறிந்து கொண்டார். சிந்தனை பேதலிக்கும்போது அவர் அப்படிச் செய்வார்.

"உங்கள் வயது?"

"அறுபது" என்றார் ஆத்மா...

"அறுபதுக்கு அதிக நரை! அதிகத் தளர்ச்சி...."

"கொஞ்சம் இருங்கள்."

டாக்டர் பலவித சாதனங்களைக் கொண்டு வந்து ஆத்மாவின் ரத்த அழுத்தம்.... சிறுநீர்.... இதயத் துடிப்பு.... கண்கள்.... உணர்ச்சி நரம்புகளின் இயக்கம்.... எல்லாவற்றையும் நிதானமாகப் பார்த்தார்.....



## அன்புத் தொல்லை

ஆஸ்திரேலிய நாட்டுப் பிரதமர் பிரேஸர் அயல் நாடுகளுக்குப் போகும்போதெல்லாம் டூரிஸ்ட் மாதிரி கழுத்தில் இரண்டு காமிராக்களைத் தொங்கவிட்டுக் கொண்டே போகிறார். தாமே நிறையப் படம் எடுத்து வருகிறார்.

சமீபத்தில் பிரேஸர் ஜப்பான் வந்தபோது அவருக்கு 588 டாலர் மதிப்புள்ள ஒரு காமிரா பரிசாகக் கொடுத்தனர். ஆஸ்திரேலிய நாட்டுச் சட்டப்படி அரசு ஊழியர்கள் யாரிடமிருந்தும் 250 டாலர்களுக்கு அதிகமான மதிப்புள்ள பொருட்களை அன்பளிப்பாகப் பெறக் கூடாது. எனவே 250 டாலர் போக மீதம் 338 டாலர் பணத்தை ஆஸ்திரேலிய நாட்டுக் கஜானாவில் கட்டிவிட்டார் பிரேஸர். டைம் - பாபு

---

''ரத்தஅழுத்தம் வயதுக்கு அதிகம். கிட்னி கொஞ்சம் பாதிக்கப்பட்டிருக்கிறது.... இதயத்தில் கொஞ்சம் மர்மர் கேட்கிறது. இன்னும் நான்கு வருஷங்கள் தள்ளும் !''

ஆத்மா திடுக்கிட்டார். மறுபடியும் மார்பைச் சொறிந்து கொண்டார். ''சிகிச்சை எடுத்துக் கொண்டால் ?''

''சொல்கிறேன். உங்களுக்கு எத்தனை வயசு வேண்டும் ?''

''புரியவில்லை.''

''உங்கள் வாழ்வில் நீங்கள் எந்த வயதில் ஓர் உன்னத நிலையில் இருந்தீர்கள் ? யோசித்துச் சொல்லுங்கள். எல்லாவிதத்திலும்.... உடலில்... உள்ளத்தில்....''

ஆத்மா யோசித்தார். எட்டு வயது ? ம்ஹூம். டைபாய்ட் காய்ச்சலில் படுத்திருந்தேன்...... பன்னிரண்டு ?... ம்ஹூம். ஒல்லியாக இருந்தேன். பதினெட்டு வயது.... கல்லூரியில் கடைசிப் பெஞ்சில் உட்கார்ந்திருந்தேன். இருபது... முதல் வேலையில் இராப் பகலாகக் கண் விழித்திருந்தேன்....முப்பது... கல்யாணம் செய்து கொண்டுவிட்டேன்....

இருபத்தைந்து ! ஆம், இருபத்தைந்து தான். அளவான புத்தகங்கள் படித்திருந்தேன். கார் ஒன்று வாங்கியிருந்தேன். போதுமான பணம் இருந்தது. நித்யா என்ற அந்தப் பெண்ணைச் சந்தித்திருந்தேன். இரண்டு மூன்று கவிதைகள் எழுதியிருந்தேன். வெளி நாடு சென்றேன்.... விதம் விதமான அனுபவ ஆரம்பங்களைத் தொட்டேன்....

''இருபத்தைந்து !'' என்றார் ஆத்மா.

''நல்ல தேர்வு !''

''அப்படி என்றால் என்னை இருபத்தைந்து வயதுக்கு மாற்றிவிட முடியுமா உங்களால்!''

''ஊ !''

''ஊ என்றால் !''

''ஏன் முடியாது ?'' என்று கையைச் சொடுக்கி, ''முடியும். நிச்சயம் முடியும்'' என்றார்.

''நம்ப முடியவில்லை.''

''நீங்கள் மருந்து சாப்பிட்டுவிட்டுப் பணம் கொடுங்கள்...... உத்தரவாதம் போதுமா?''

''நான் பணத்துக்குச் சொல்லவில்லை.... எனக்கு இந்தத் தந்திர சிகிச்சைதான் புரியவில்லை.''

'' தந்திரமில்லை இது. கலப்படம் இல்லாத விஞ்ஞானம்.

'' உங்கள் மெடபாலிஸத்தையும்.... ம்யூடேஷனையும் தலைகீழாகக் கவிழ்த்துவிடுகிறது என் மருந்து.... உங்களுக்கு கெமிஸ்ட்ரி வருமா ?''

''வராது.''

'' சரி..... உங்களுக்கு எப்படிப் புரிய வைப்பது...... ஒரு நிமிஷம் ! கீழே வரும் போது ஒரு நாயைப் பார்த்தீர்கள் அல்லவா?''

''ஆம்.''

''அந்த போட்டோவைப் பாருங்கள்.''

எதிரே மாட்டியிருந்த போட்டோக்கள் ஒன்றில் டாக்டர் அவர்கள் சிரித்துக் கொண்டு நின்றிருக்க அருகில் ஆளுயரக் கொம்பை நாய் ஒன்று நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்று கொண்டிருந்தது. ''அதுதான் கீழே நீங்கள் பார்த்த நாய்'' என்றார் டாக்டர்.

'' நான் பார்த்தது குட்டி நாயல்லவா ?''

''இரண்டு வேளை மருந்து செய்த வேலை!'' என்று கண் சிமிட்டினார் டாக்டர்.

ஆத்மா அந்த வயதான டாக்டரைப் பார்த்தார்...... யார் இவர் ! பொய் ஆசாமியா ! இல்லை... இவர் என் உடம்பைப் பரிசோதித்துச் சொன்னது மற்ற டாக்டர் சொன்னதுடன் பொருந்துகிறதே.... இருந்தும் இது சாத்தியமா ?.... இந்தக் காலத்தில் என்னென்னவோ மாத்திரைகள் எல்லாம் கண்டுபிடித்திருக்கிறார்கள்..... இதுவும் சாத்தியமாக இருக்கலாமே !

ஒரு யுவதி இரண்டு கோப்பைகளில் பானம் பருகக் கொண்டு வந்தாள். மேஜையின்மேல் வைத்துவிட்டுத் திரும்பினாள். ''சக்கு....! கொஞ்சம் இரு....'' என்றார் டாக்டர்.

''இது யார் தெரியுமா, மிஸ்டர் ஆத்மா?''

''உங்கள் பேத்தியா !''

''பூஹ்!'' என்று சிரித்துவிட்டு, ''இது என் மனைவி ! ஆறு வேளை சாப்பிட்டிருக்கிறாள். சக்கு திரும்பு !'' என்றார்.

ஆத்மாவை சவால் விடுவதுபோல் பார்த்த அந்தப் பெண்ணின் கன்னங்களில் ஆப்பிள் தெரிந்தது. உடலில் இளமை எழுதியிருந்தது.

''எப்படி இருக்கிறாள், பாருங்கள். வில் மாதிரி வின் என்று.''

''போங்க, அத்தான் !'' என்று அவள் அலட்சியமாய்க் கூறிச் சென்றாள். ஆத்மாவின் மனத்தில் சற்று நேரம் அவள் பாக்கி இருந்தாள்.

''என்றால் அவளைப் பார்க்கத்தான் முடியும் ! வேறு ஒன்றும் செய்ய முடியாது !'' என்றார் டாக்டர்....

''டாக்டர், நீங்களே ஏன் மருந்து சாப்பிடவில்லை !''

''ஹ்ம் ! இந்தக் கேள்வி கேட்பீர்கள் என்று தெரியும். எனக்கு இன்னும் வேளை வரவில்லை. மற்றவர்களுக்காக நான் தியாகம் செய்து கொண்டிருக்கிறேன் ! நான் மருந்து சாப்பிட்டு இளம் வயதை எய்திவிட்டால் நான் செய்த ஆராய்ச்சியெல்லாம் பாழ் ! இதன் ஃபார்முலா எல்லாம் (தலையைத் தொட்டு), இங்கே இருக்கிறது. எல்லாம்

நறுமணத்துடன் கூடிய, ஒரு புத்துணர்ச்சி...




தெய்வீக மணம் கமழும்
ஒரே சந்தன சோப்

# கேரளா சந்தன சோப்

- கூடுதல் குளிர்ச்சிக்கான வெட்டி வேர் அடங்கிய ஒரே சந்தன சோப்
- மிகவும் நவீனமான ஆட்டோமாட்டிக் இயந்திரங்களினால் உருவாக்கப்படும் சோப்
- சந்தன மணம் வீசிக்கொண்டே இருக்கும்
- உங்கள் மேனியின் நிறத்தை அழகுடனே இருக்கச் செய்வது
- மற்ற எல்லா சந்தன சோப்புகளை விட அதிக நாட்கள் பயன் தருவது.

கேரளா சாண்டல் சோப், நறுமணம், புத்துணர்ச்சி, குளிர்ச்சிக்கு நீங்களே உபயோகித்துப் பாருங்கள். நீங்கள் ஒரு புதிய அனுபவத்தைக் காண்பீர்கள்.

உங்கள் பொதுத்துறை நிறுவனத்தின் தரமுள்ள தயாரிப்பு




தயாரிப்பாளர்கள்:
கேரளா சோப் & ஆயில்ஸ் லிட்.,
கள்ளிக்கோட்டை-673 005.

adguild.KSO.489 Tam.

## ஸ்ரீ வேங்கடேசுவர வைபவம்



பக்தர்கள் மனக் குறை ஏதும் இன்றி எளிதில் தம்மைத் தரிசித்து மகிழும் வாய்ப்பை அளிக்க ஏழுமலையான் திருவுளம் கொண்டார். டாக்குமெண்டரி திரைப் படம் உருவாகி விட்டது. கருவறையில் உள்ள மூலவரின் அபிஷேகத்தையும் உற்சவ மூர்த்தி தீர்த்தம் கொடுத்துப் பக்தர்களை நீராட வைக்கும் அழகையும் காணலாம்; கண்கொள்ளாக் காட்சி.

மேள தாளத்தோடு சுந்தரத் தெலுங்கினில் கண்டசாலா, லீலா, சுசீலா ஆகியோர் பாட்டிசைப்பதையும் எடுப்பான குரலில் உரை நடை வர்ணனையும் கேட்டு மகிழும்போது, கேட்கக் காதுகள் எத்தனை வேண்டும் என்று கணக்குப் போடத் தோன்றும்.

இது ஒரு திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு.

-ரா.வீ

---

மறந்துவிட்டால் மறுபடியும் முதலிலிருந்து ஆரம்பிக்க வேண்டும் !''

'' எழுதி வைத்துவிடுவதுதானே !''

''எழுதிக் கொண்டிருக்கிறேன் ! எழுதிக் கொண்டிருக்கிறேன் ! ஒரு வேளை மருந்து தயாரிப்பதற்கே ஆறு மாதங்கள் ஆகிறது. தயாரிப்பு முறையை எழுதுவதற்கு வருஷக் கணக்கில் ஆகும் ! எனக்கு ஒன்றும் அவசரமில்லை. உள்ளே வாருங்கள். உங்களை மன்மதன் மாதிரி மாற்றி விடுகிறேன். உத்தர வாதம்..... யயாதி கதை தெரியுமா உங்களுக்கு.....!''

''தெரியும்.''

''புராண காலத்திலிருந்தே இளமைக்கு மருந்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.... காயகல்பங்களும் அமிர்தங்களும். அதெல்லாம் கற்பனைகள். இது நிஜம். கொஞ்சம் படுத்துக் கொள்ளுங்கள். உங்கள் ரத்த அழுத்தத்தை மறுபடியும் சோதிக்க வேண்டும்.''

அந்த மருந்து தங்க நிறத்தில் இருந்தது. தகதகத்தது. ''வீட்டில் குளிர்ப்பதனப் பெட்டி இருக்கிறதல்லவா....? அதில் வைத்துக் கொள்ளுங்கள். இரண்டு நாளைக்கு ஒரு வேளை சாப்பிடுங்கள். மயக்கம் வந்தால் பேசாமல் படுத்துவிடுங்கள். ஒரு வாரத்துக்கு வீட்டைவிட்டு வெளியே போகாதீர்கள். அதிகம் பேரைச் சந்திக்காதீர்கள். மார்க் பண்ணியிருக்கிற அளவுக்கு மேல் சாப்பிடாதீர்கள். பெண்ணுறவு, மாமிசம், மது எதுவும் கூடாது.... மிகக் குறைந்த அளவு கோதுமைப் பண்டங்களைச் சாப்பிடுங்கள்.... உங்கள் விலாசம் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள். நான் வந்து மூன்று நாட்களில் உங்களைப் பார்க்கிறேன்.''

''பணம் ?''

''வருகிறேன்! இன்றைக்கு என்ன தேதி? ஐந்து. 14ந் தேதியிட்டு எனக்கு ஒரு செக் எழுதிக் கொடுங்கள் போதும்.... அதற்குள் உங்களுக்கு ஒன்றும் நிகழவில்லை என்றால்.... உடனே நீங்கள் உங்கள் பாங்கிற்கு டெலிபோன் செய்து செக்கை ரத்து செய்துவிடலாம்.....''

'' நிகழ்ந்தால்... மருந்து வேலை செய்தால் ?''

டாக்டர் சிரித்து... ''மிஸ்டர் ஆத்மா.... நீங்கள் இருபத்து ஐந்து வயதை எய்திவிடுவீர்கள்.... என்னைச் சந்தித்ததை என்னிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டதை... எனக்கு செக் எழுதிக் கொடுத்ததை எல்லாம் மறந்துவிடுவீர்கள் ! அப்படி ஞாபகம் பாக்கி இருந்தாலும்.... இந்தத் தொகையை மனமுவந்து கொடுக்கத் தயங்கமாட்டீர்கள்..... இளமை விலையற்றது.....''

''தொகை எவ்வளவு ?''

''எழுபத்து ஐந்தாயிரம் !''

''அடேயப்பா ! ஏறக்குறைய என் வாழ்நாள் முழுதும் சேர்த்து வைத்தது....''

''கிடைக்கப் போவது மற்றொரு வாழ்நாள் மிஸ்டர் ஆத்மா !''

நான்காவது தினம். டாக்டர் அவர்கள் ஆத்மாவின் விலாசத்தை வைத்துக்கொண்டு மெதுவாக அந்த வீட்டின் வாசலை நெருங்கினார். துணுக்குற்றார்.

வீட்டு வாசலில் ஒரு சிறிய கூட்டம் இருந்தது. அமைதியாக ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு இருந்தார்கள். ஒரு போலீஸ் தொப்பி தென்பட்டது.

''என்ன சார், ஆச்சு ?''

''இந்த வீட்டில் ஒரு வயசானவர் இருந்தார். ரொம்ப நல்ல மனுஷன்... தனியாத்தான் இருந்தார்.''

''என்ன ஆச்சு அவருக்கு...?''

''காணாமல் போயிட்டாரு !... அதெல்லாம் ஆச்சரியம் இல்லே. அவர் எங்காவது ஊருக்கு கிளம்பிப் போயிருக்கலாம்.... ஒருத்தரும் கவனிக்கலே ! ஆனால் பாருங்க. பெரியவரே... நேத்து ராத்திரி வீட்டுக்குள்ளே வ்ராட்டு வ்ராட்டுன்னு அழுகை சத்தம் கேக்குதாம். கதவு உள் பக்கம் தாப்பா போட்டிருக்குது. பக்கத்து வீட்டுக்காரங்க ஜன்னல் வழியா எட்டிப் பார்த்தா உள்ளே - ''

''உள்ளே ?''

'' நீங்களே போய்ப் பாருங்களேன் ! ஒரே மர்மம் !'' டாக்டர் தயக்கத்துடன் உள்ளே நுழைந்தார்.

''யார்யா நீ !'' என்றார் ஒரு போலீஸ்காரர்.

'' இந்த வீட்டுக்காரருக்குத் தெரிந்தவன்.... எங்கே அவர் ?''

'' எங்கே அவர்னு தெரிஞ்சா நாங்க ஏன் இங்கே இருக்கோம்... இந்தக் குழந்தை யாருதுன்னு வேறு தெரியலே.''

டாக்டரின் கண்கள் அலைந்தன.... அந்த மருந்து சீசா அலமாரியில் இருந்தது. அது காலியாக இருந்தது.... அடப் பாவி! இரண்டு நாளைக்கு ஒரு வேளை சாப்பிடச் சொன்னேன். ஒரு நாளைக்கு இரண்டு வேளை சாப்பிட்டிருக்கிறான் ! கட்டிலைப் பார்த்தார்.

பெரிய பனியனை அணிந்து கொண்டு சம்பந்தமில்லாமல்... 

## இரு இதழ்களில்...

வாதாபிக்குப் படையெடுத்துச் சென்ற நரசிம்ம வர்மச் சக்கரவர்த்தி அந்த மாபெரும் வெற்றியின் அடையாளமாகப் பல்லவ ரிஷபக் கொடியைச் சிம்மக் கொடியாக மாற்றிக்கொண்டார். காஞ்சி திரும்பியதும் தெற்கே அவர் கவனம் திரும்பியது. சோழக் குறுநில மன்னன் பார்த்திபன் கடந்த பல ஆண்டு களாகவே கப்பம் செலுத்தவில்லை என்பதை உணர்ந்து தூது அனுப்பினார். கப்பம் செலுத்த மறுத்தால் போர்க்களத்தில் சந்திக்கத் தயாராகு மாறு செய்தியுடன் தூதர்கள் உறையூருக்கு வந்தனர்.

வசந்த மாளிகையிலிருந்து கிளம்பி உறையூரில் தூதர்களைச் சந்திக்கப் புறப்பட்ட பார்த்திப மகாராஜா, காவிரியைக் கடக்கும்போது படகோட்டியவன் பொன் னன். யுத்தம் வருவது நிச்சயம் என்ற அளவில் அவன் தன்னையும் போர்க்களத்துக்கு அழைத்துப் போகுமாறு மன்னரிடம் யாசித்தான். பொன்ன னுடைய மனைவி வள்ளி இதைக் கேட்டு மனம் பதைத்தாள். ஆனால் பார்த்திப சோழர் தாம் ஒருவேளை போர்க்களத்திலிருந்து திரும்பி வராமல் போனால் இளவரசன் விக்கிரமனுக்கு நீந்தக் கற்றுத் தரும் பொறுப்பைப் பொன்னன் ஏற்க வேண்டும் என்று ஆக்ஞை பிறப்பித்துவிட்டுச் சென்றார். சற்று நேரத்துக்குப் பின் அவரைத் தொடர்ந்து பொன்னனும் வள்ளியும் உறையூர் நோக்கிச் சென்றனர்.

பார்த்திப சோழ மகாராஜா பல்லவ தூதர்களைச் சந்தித்தாகி விட்டதென்றும் வெண்ணாற்றங்கரையில் புரட்டாசி பௌர்ணமியில் இரு படைகளும் மோது மென்றும் பொன்னனும் வள்ளியும் அறிந்தனர்.

பொன்னன் அரண்மனைக்குப் போக நினைத்து வள்ளியை அவள் பாட்டன் வீட்டில் விட்டுச் செல்ல எண்ணினான். அவ்வாறே கம்மாளத் தொழில் நடத்திய வீரபத்திர ஆசாரியின் வீட்டுக்குப் போன போது அக்கிழவன் பொன்னனைத் தனியே அழைத்து, "மகாராஜாவை மாரப்ப பூபதி விஷயமாகச் சற்று ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லு" என்றான்.

இச் செய்தி அளித்த வியப்புடன் பொன்னன் விடைபெற்றுச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் மாரப்ப பூபதியே வீரபத்திர ஆசாரி வீட்டுக்கு வந்து சேர்ந்தான். வள்ளியுடன் பேசிக் கொண்டிருந்த கிழவன், அவசரமாக அவளை உள்ளே அனுப்பினான். "இந்தச் சண்டாளன் கண்ணில் நீ படவேண்டாம். அவன் தொலைந்ததும் உன்னைக் கூப்பிடுகிறேன்" என்றான்.



# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

### அத்தியாயம் 5

## மாரப்ப பூபதி

வாசலில் குதிரையில் வந்து இறங் கியவன் திடகாத்திரமுள்ள யௌவன புருஷன்; வயது இருபத்தைந்து இருக் கும். ஆடை ஆபரணங்கள் உயர்ந்த ராஜரீக பதவியைக் குறிப்பிட்டன. ஆசாபாசங்களினாலும் மதமாற்சரியங் களினாலும் அலைப்புண்ட உள்ளத்தை முகக் குறி காட்டியது.

''சேனாபதி! வரவேணும்'' என்று சொல்லிக் கிழவன் வந்தவனை வர வேற்று உள்ளே அழைத்துக் கொண்டு வந்தான்.

''இனிமேல் என்னை அப்படிக் கூப் பிடாதே! நான் சேனாபதி இல்லை; நான் மாரப்ப பூபதி இல்லை; நான் என் தகப்பனுக்குப் பிள்ளையே இல்லை!'' என்று கோபமான குரலில் சொல்லிக் கொண்டு மாரப்ப பூபதி உள்ளே வந் தான். முற்றத்தில் ஏற்கனவே கிழவன் உட்கார்ந்திருந்த பீடத்தில் அமர்ந் தான்.

'' யுவராஜா! ரொம்பக் கோப மாய் இருப்பது போல் தெரிகிறது!''

''யுவராஜாவா? யார் யுவராஜா? நானா? நேற்றுப் பிறந்த அந்தப் பரதைப் பயல் அல்லவா யுவராஜா? இளவரசர் விக்கிரமசிங்கர் வாழ்க! ஜய விஜயீபவ!'' என்று பரிகசிக்கும் குரலில் கூறிவிட்டு மாரப்ப பூபதி 'இடி இடி' என்று சிரித்தான்.

சற்றுப் பொறுத்து, ''அது போகட் டும், ஆச்சாரி! உன் சோழி என்ன தெரிவிக்கிறது? அதைச் சொல்லு!'' என்றான்.

வீரபத்திர ஆச்சாரி கொல்லு வேலை செய்ததுடன், சோதிட சாஸ்திரத்தில்



வல்லவன் என்று பெயர் வாங்கியிருந்தான். சோழிகளை வைத்துக் கொண்டு அவன் கணக்குப் போட்டு ஜோசியம் பார்ப்பது வழக்கம்.

"யுவராஜா! எதற்காக இந்தப் பிரமை உங்களுக்கு...?" என்று ஆரம்பித்தான் கிழவன்.

"அந்தக் கதையெல்லாம் அப்புறம் வைத்துக் கொள்ளலாம். நீ ஏதாவது பார்த்தாயா இல்லையா? வெறுமனே என்னை அலைக்கழிக்க உத்தேசமா?"

"பார்த்தேன், யுவராஜா! உங்களுக்கு என்ன வேணுமோ, கேட்டால் சொல்லுகிறேன்."

"முக்கியமான விஷயம் சண்டைதான். அதன் முடிவு என்ன ஆகும்? இதைத் தெரிந்து சொல்ல முடியாவிட்டால், உன் ஜோசியத்தினால் என்ன பிரயோஜனம்? சுவடிகளையும் சோழிகளையும் தூக்கி நானே காவேரியாற்றில் எறிந்து விடுகிறேன்!" என்றான் மாரப்பன்.

"அப்படியே செய்து விடுங்கள், யுவராஜா! எனக்கு ரொம்ப அநுகூலமாயிருக்கும். பாருங்கள்! என்னுடைய

சொந்த விஷயத்தில் இந்த சாஸ்திரம் பிரயோஜனப்படவில்லே. ஒரே நாளில் குடும்பம் முழுதும் அழிந்துவிட்டது. குலத்தை வளர்ப்பதற்கு ஒரு பெண் குழந்தைதான் மிஞ்சியிருக்கிறது.''

''வள்ளி சுகமாயிருக்கிருளா, ஆச்சாரி ?'' என்று மாரப்ப பூபதி கேட்டான். அப்போது அவன் முகத்தில் ஒரு விகாரம் காணப்பட்டது.

''ஏதோ இருக்கிருள்'' என்ருன் கிழவன்.

''ஆமாம், பொன்னன் சண்டைக்குப் போய்விட்டால் வள்ளி என்ன செய்வாள் ?''

'' அதற்கென்ன, யுவராஜா ! வள்ளியைக் காப்பாற்றக் கடவுள் இருக்கிருர்; இந்தக் கிழவனும் இருக்கிறேன்!'' என்று அழுத்திச் சொன்ஞர் வீரபத்திர ஆச்சாரி.

''ஆமாம்; நீ இருக்கும்போது அவளுக்கு என்ன வந்தது? இருக்கட்டும்; ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிருேம். இந்தச் சண்டையின் முடிவு என்னஆகும்? உன் சோழிக் கணக்கில் ஏதாவது தெரிகிறதாயிருந்தால் சொல்லு; இல்லாவிட்டால் உன் ஜோசியக் கடையைக் கட்டு !''

''கடையை அப்போதே கட்டிவிட்டேன், யுவராஜா ! உங்களுடைய தொந்தரவினல்தான் மறுபடியும் அதைத் திறந்தேன் !''

''திறந்ததில் என்ன தெரிந்தது?''

''கிரகங்களின் சேர்க்கை ரொம்பப் பயங்கரமான முடிவைக் காட்டுகிறது.



சண்டையில் ஒரு பக்கத்துச் சேனை அடியோடு அழிந்து போகும். யுத்த களத்துக்குப் போனவர்களில் ஒருவ ராவது திரும்பி வரமாட்டார்கள். ஆனால், எந்தப் பக்கத்துச் சேனை என்று எனக்குத் தெரியாது.''

''அது எனக்குத் தெரியும். எந்தப் பக்கத்துச் சேனை அழியும் என்று சொல் வதற்கு நீயும் வேண்டாம்; உன் சோழி யும் வேண்டாம். திரும்பி வராமல் நிர்மூலமாகப் போகிறது சோழ சைனி யம்தான். அந்தப் பெரும் புண்ணியத் தைத்தான் உங்கள் பார்த்திப சோழ மகாராஜா கட்டிக் கொள்ளப் போகி றார்!''

'' யுவராஜா! நீங்களே இப்படிச் சொல்லலாமா? நமக்குள் எவ்வளவு மனஸ்தாபங்கள் இருந்தாலும், பகைவ னுக்கு முன்னால்....''

''யார் பகைவன்? பல்லவ சக்கர வர்த்தியா நமக்குப் பகைவன்? இல்லவே இல்லை! சோழநாட்டுக்கு இப்போது பெரிய பகைவன் பார்த்திபன்தான். இவன் கையிலே வாள் எடுத்து அறிய மாட்டான்! வேல் வீசி அறிய மாட் டான்! இப்பேர்ப்பட்ட வீராதி வீரன் பல்லவ சைனியத்துடன் போர் செய்யக் கிளம்புகிறான். பல்லவ சைனி யம் என்றால் இலேசா? சமுத்திரத்தின் மணலை எண்ணினாலும் எண்ணலாம், பல்லவ சைனியத்திலுள்ள வீரர்களை எண்ண முடியாது. காவேரியிலிருந்து கோதாவரி வரையில் பரந்து கிடக்கும் பல்லவ சாம்ராஜ்யம் எங்கே? ஒரு கையகலம் உள்ள சோழ நாடு எங்கே? நரசிம்ம சக்கரவர்த்திதான் லேசுப்பட்ட வரா? நூறு யோசனை தூரம் வடக்கே சென்று ராட்சதப் புலிகேசியைப் போர்க்களத்திலே கொன்று, வாதாபி யைத் தீ வைத்துக் கொளுத்திவிட்டு வந்தவர். அவருடன் நாம் சண்டை போட முடியுமா? யானைக்கு முன்னால் கொசு!....''

''யுவராஜா! இதையெல்லாம் என் னிடம் ஏன் சொல்லுகிறீர்கள்? மகா ராஜாவிடம் சொல்லுவதுதானே?''

''மகாராஜாவிடம் சொல்லவில்லை யென்று நினைத்துக் கொண்டாய், கிழவா? சொன்னதன் பலன்தான் எனக்குச் சேனாதிபதிப் பதவி போயிற்று. மகாராஜாவே சேனாதிபதிப் பதவியை யும் ஏற்றுக் கொண்டுவிட்டார்! சைனி யத்தை அவரே நடத்திக் கொண்டு யுத்த களத்துக்கும் போகப் போகிறா ராம்! தாராளமாய்ப் போகட்டும். இந்தப் பிரமாத சேனாதிபதி பதவி இல்லையென்று யார் அழுதார்கள்?''

''அப்படியானால் யுவராஜா! நீங்கள் யுத்தத்துக்கே போக மாட்டீர்களோ?''

''நானா? நானா? என்னைக் கூப்பிட் டால் போவேன்; கூப்பிடாவிட்டால் போக மாட்டேன்.... கிழவா! சண்டை யின் முடிவைப் பற்றிச் சொன்னாயே, அதை இன்னொரு தடவை விவரமாய்ச் சொல்லு!''

''ஆமாம், யுவராஜா! ஒரு கட்சி யைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் யுத்த களத்தில் அழிந்து போவார்கள். ஒருவ ராவது உயிரோடு திரும்பிவர மாட் டார்கள்!''

''உயிரோடு திரும்பி வரமாட் டார்களா? பின் உயிரில்லாமல் திரும்பி வருவார்களோ? ஹா ஹா ஹா!'' என்று மாரப்ப பூபதி உரக்கச் சிரித் தான். பிறகு, ''ஆமாம், ஆமாம்! நான் யுத்தத்தில் செத்துப் போனால் நிச்சயமாகப் பிசாசாகத் திரும்பி வரு வேன்; திரும்பி வந்து வள்ளியைப் பிடித் துக் கொண்டு ஆட்டுவேன்!'' என்று கூறி மறுபடியும் பயங்கரமாகச் சிரித் தான்.

சமையல் அறையிலிருந்து இதைக் கேட்டுக் கொண்டிருந்த வள்ளி தன் இரண்டு கையையும் நெரித்து, ''உன் கழுத்தை இந்த மாதிரி நெரித்துக் கொல்லுவேன்!'' என்று முணு முணுத்தாள். கொஞ்சம் காது மந்த முள்ள கிழவி, ''என்ன சொல்லுகிறே, வள்ளி?'' என்று கேட்கவும், வள்ளி அவ ளுடைய வாயைப் பொத்தி, ''சும்மா இரு!'' என்றாள்.

''உள்ளே யார் பேசுகிறது?'' என்று கேட்டான் மாரப்ப பூபதி.

''யார் பேசுவார்கள்? என்னைப் பிடித்திருக்கிறதோ, இல்லையோ, ஒரு கிழப் பிசாசு, — அதுதான் தனக்குத் தானே பேசிக் கொண்டிருக்கும்!'' என் றான் கிழவன்.

''சரி, எனக்கு நேரமாச்சு; போக வேணும். என் கிரக பலன்களைப் பற்றி நீ சொன்னதெல்லாம் நிஜந்தானே, ஆச் சாரி! பொய் சொல்லி ஏமாற்றி யிருந்தாயோ.....!''

''தங்களை ஏமாற்றி எனக்கு என்ன ஆகவேணும் யுவராஜா!''

மாரப்ப பூபதி எழுந்து நின்று சுற்று முற்றும் பார்த்தான். முற்றத்தில் அடுக்கி வைத்திருந்த வாள்களையும், வேல்களையும் கத்தி கேடயங்களையும் பார்த்துவிட்டுச் சிரித்தான். ''ஆஹா! ரொம்ப மும்முரமாய் வேலை செய்கிறாயாக் கும்! கத்தி! கேடயம்! வாள் வேல்! இந்த வாழைப் பட்டைக் கத்திகளையும்,

புல் அரியும் அரிவாள்களையும் வைத்துக் கொண்டுதான் உங்கள் பார்த்திப மகாராஜா, பல்லவ சக்கரவர்த்தியை ஜயித்துவிடப் போகிறார்! நல்ல வேடிக்கை! ஹாஹாஹா!'' என்று உரக்கச் சிரித்துக் கொண்டே ஒரு பக்கத்தில் அடுக்கி வைத்திருந்த வாள்களைக் காலால் உதைத்துத் தள்ளினான். அப்படியே வாசற் பக்கம் போனான்.

உலைக் களத்தில் கிளம்பும் அனற் பொறிகளைப் போல் கிழவன் கண்களிலே தீப்பொறி பறந்தது.

## அத்தியாயம் 6

# போர் முரசு

வீட்டு வாசலிலிருந்து குதிரை கிளம்பிப் போன சத்தம் கேட்டதும், வள்ளி முற்றத்துக்கு வந்தாள். மாரப்ப பூபதி உதைத்துத் தள்ளிய கத்திகளில் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு, ''தாத்தா! இந்தக் கத்தி கேடயம் எல்லாம் நீ செய்து என்ன பிரயோஜனம்? நமது மகாராஜாவைப் பற்றி அப்படிக் கேவலமாய்ப் பேசியவனைச் சும்மா தானே விட்டுவிட்டாய்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

''ஏன், வள்ளி உனக்கு இவ்வளவு கோபம்? நீ சொன்னதைத்தானே நமது பழைய சேனாதிபதியும் சொன்னார், — சண்டை வேண்டாம் என்று?'' என்றான் கிழவன்.

''சேச்சே! நான் சண்டை வேண்டாம் என்று சொன்னேனா? சண்டை எதற்காக என்று தெரியாமல்தானே கேட்டேன்?'' என்று வள்ளி சொன்னபோது அவள் கண்களில் நீர் ததும்பிற்று.

''ஆமாம், வள்ளி! அதை நான் சொல்ல ஆரம்பித்தபோதுதான் இந்தப் பாவி வந்துவிட்டான். வாதாபி சக்கரவர்த்தி புலிகேசி, தென் தேசத்தின் மீது படையெடுத்து வந்து பல அட்டூழியங்கள் செய்துவிட்டுத் திரும்பிப் போனதைச் சொன்னேனல்லவா? அதற்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காக நரசிம்ம சக்கரவர்த்தி வெகுகாலம் ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். கடைசியில் ஆறு வருஷங்களுக்கு முன்பு அவர் வாதாபியின் மேல் படையெடுத்துச் சென்றார், அப்போது நமது பார்த்திப மகாராஜாவையும் தமது படைகளுடன் வந்து சேர்ந்து கொள்ளும்படி ஓலை அனுப்பினார். அதற்குப் பார்த்திப மகாராஜா அப்படியே செய்வதாகவும், ஆனால் அதற்குப் பிரதியாக அன்று முதல் உறையூரிலிருந்து கப்பம் வாங்குவதை நிறுத்திவிட வேண்டும் என்றும், சோழ நாட்டின் புலிக் கொடிக்குச் சம மரியாதை கொடுக்க வேண்டும் என்றும் செய்தி அனுப்பினார். இதை நரசிம்ம சக்கரவர்த்தி கவனிக்கவேயில்லை. மறு ஓலைகூட அனுப்பாமல் படை கிளம்பிப் போய்விட்டார். அன்று முதல் பார்த்திப மகாராஜாவும் காஞ்சிக்குக் கப்பம் அனுப்புவதை நிறுத்தி விட்டார். அது காரணமாகத்தான் யுத்தம் வந்திருக்கிறது. வள்ளி! இப்போது நீயே சொல்லு. பார்த்திப மகாராஜா முன் வைத்த காலைப் பின் வைத்துச் சக்கரவர்த்தியிடம் சரணாகதி அடைந்துவிடலாமா? நமது சிராப்பள்ளி மலையில் போட்ட புலிக் கொடியைத் தாழ்த்திப் பல்லவர்களின் எருதுக் கொடியை மறுபடியும் பறக்கவிடலாமா? அந்த அவமானத்தைச் சகித்துக் கொண்டா வது இந்தச் சோழ தேசத்து மக்கள் எதற்காக உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்?''

''அந்த நியாயமெல்லாம் எனக்குத் தெரியாது, தாத்தா! நமது பார்த்திப மகாராஜா என்ன செய்கிறாரோ, அது தான் சரி. அவருக்கு விரோதமாய்ப் பேசுகிறவர்கள் எல்லாரும் பொல்லாத பாவிகள். அவர்கள் நரகத்துக்குத்தான் போவார்கள். இந்த மாரப்ப பூபதியை நீ சும்மா விட்டு விட்டாயே என்று எனக்கு இருக்கிறது தாத்தா! நமது மகாராஜா எவ்வளவு நல்லவர், தெரியுமா......?''

''ஆமாம்; நமது மகாராஜா ரொம்ப நல்லவர்தான், ஆகையினால் தான் இந்தக் குலங்கெட்ட மாரப்பனுக்கு இவ்வளவு இடம் கொடுத்துத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடினார்....!''

''என்ன சொல்லுகிறாய், தாத்தா?''

''சரியாகத்தான் சொல்லுகிறேன். இந்த மாரப்ப பூபதி நமது மகாராஜாவின் சொந்தச் சகோதரன் அல்ல. பழைய மகாராஜா ஐம்பது வயதுக்கு மேல் சபலம் தட்டி யாரோ ஒரு மூதேவியைக் கல்யாணம் செய்து கொண்டார். ஊரில் யாருக்குமே அந்தக் கல்யாணம் பிடிக்கவில்லை. அந்த மூதேவியின் பிள்ளை தான் இந்த மாரப்பன். பழைய மகாராஜா செத்துப் போகும்போது, பார்த்திபருக்குப் பிள்ளைக் குழந்தை இல்லாவிட்டால் இவனுக்குப் பட்டத்தைக்

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை
# கால்ஷியம்-ஸாண்டோஸ்®



ஸ்விட்சர்லாந்தில் ஸாண்டோஸ் உருவாக்கியுள்ள, உலகிலேயே தலைசிறந்த கால்ஷியம்

கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் கலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்–ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும் வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




## கால்ஷியம்-ஸாண்டோஸ்®
## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

CA/CS/15 I TAM.

கொடுக்க வேணுமென்று சொல்லிவிட்டுப் போனாராம். விக்கிரம இளவரசர் பிறக்கும் வரையில் இவன்தான் 'யுவராஜா'வாக விளங்கினான். பார்த்திப மகாராஜா எவ்வளவோ இவனிடம் அன்பு காட்டிக் கௌரவம் அளித்துச் சேனாபதிப் பதவியும் கொடுத்திருந்தார். இவனோ நன்றிகெட்ட பாதகனாயிருக்கிறான். குலத்தின் குணம் எங்கே போகும்?''

''இவனோடு உனக்கு என்னத்திற்காகச் சகவாசம் தாத்தா? இவனுக்கு நீ ஜோசியம் சொல்லுவது என்ன வேண்டிக் கிடந்தது?''

''உன்னால் ஏற்பட்ட சகவாசந்தான் வள்ளி!'' என்றான் கிழவன்.

வள்ளி திடுக்கிட்டு, ''என்னால் ஏற்பட்டதா? நன்றாயிருக்கிறதே, கதை!'' என்றாள்.

''உன்னால் ஏற்பட்டதுதான். இத்தனை நாளும் உன்னிடம் சொல்லாமல் வைத்திருந்ததை இப்போது சொல்லப் போகிறேன், வள்ளி! காலம் ரொம்ப அபாயமான காலம். நமது மகாராஜாவுக்கு என்ன நேருமோ, ராஜ்யம் என்ன கதி அடையுமோ, தெரியாது. இந்த மாரப்ப பூபதி யுத்தத்துக்குப் போக மாட்டான் என்று மட்டும் எனக்கு நிச்சயமாய்த் தெரியும். நீ இவன் விஷயத்தில் ரொம்ப எச்சரிக்கையாயிருக்க வேணும்.''

''என்ன தாத்தா, ரொம்பப் பயமுறுத்துகிறாய்? இந்தக் கரிமுஞ்சியிடம் எனக்கு என்ன பயம்?'' என்று வள்ளி கேட்டாள்.

''நான் சொல்லுகிறதைக் கொஞ்சம் கேள், அம்மா. ஒரு காலத்தில் இந்த மாரப்ப பூபதி தனக்கு உன்னைக் கட்டிக் கொடுக்க வேணுமென்று கேட்டுக் கொண்டிருந்தான்.....''

''அவன் தலையிலே இடி விழ!'' என்றாள் வள்ளி.

''அவன் தலையில் இடி விழவில்லையே, அம்மா! என் தலையிலே அல்லவா விழுந்தது! கிரக சஞ்சார ரீதியாக அப்போது நம் குடும்பத்துக்கு ஏதோ பெரிய விபத்து வரப் போகிறதென்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த மாரப்ப பூபதி தன் ஆள்களை அழைத்துக் கொண்டு வந்து உன்னைத் தூக்கிக் கொண்டு போவதாக இருந்தான். இதுவும் எனக்குத் தெரிந்தது. நீயும் உன் தமையன்மார்களும் அப்போது வீட்டில் இருந்தால் ரத்தக் களரியாகும் என்று எண்ணித்தான் எல்லோரையும் அக்கரையில் நடந்த கல்யாணத்துக்குப் போங்கள் என்று அனுப்பினேன். யமன் நடு ஆற்றில் சூறாவளிக் காற்றாக வந்தான். உன் அண்ணன்மார் எல்லாரும் செத்துப் போனார்கள். சுவாமி உன்னை மட்டும் எனக்குக் கொடுத்தார்....''

இப்படிச் சொல்லிவிட்டுக் கிழவன் பெருமூச்சு விட்டான். ஆகாயத்தைப் பார்த்து ஏதோ யோசனையில் ஆழ்ந்தான்.

வள்ளி, ''இத்தனை நாளும் சொல்லவில்லையே, தாத்தா? இவன்தானா என் அண்ணன்மார்களுக்கெல்லாம் யமனாக வந்தவன்? அப்புறம் என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

''நீங்கள் எல்லோரும் படகேறிப் போன பிறகு நான் எதிர்பார்த்தபடியே இவன் தன் ஆட்களுடன் வந்தான். வீட்டில் நீ இல்லை என்று கண்டதும் தம் தம் என்று குதித்தான். அவனைச் சமாதானப்படுத்துவதற்காக நான் சோதிட சாஸ்திரத்தை உபயோகப்படுத்தினேன். 'நீ பெரிய சக்கரவர்த்தியின் மருமகன் ஆகப் போகிறாய், அப்பா! இந்த அற்ப ஆசைகளையெல்லாம் விட்டுவிடு' என்று சொன்னேன். அது முதல் அவன் என்னவெல்லாமோ ஆகாசக் கோட்டைகள் கட்ட ஆரம்பித்துவிட்டான். ஜோசியம் கேட்பதற்கு அடிக்கடி வந்து என் பிராணனை வாங்கிக் கொண்டிருக்கிறான்.''

''இப்போதுதான் அவன் என்னைப் பற்றிப் பேசியதன் அர்த்தம் புரிகிறது, தாத்தா! ஓடக்காரர் யுத்தத்துக்குப் போய்விட்டால் நான் என்ன செய்வேன், நீதான் என்னைக் காப்பாற்ற வேணும்'' என்று சொல்லிக் கிழவனுடைய கையை வள்ளி கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அவளுடைய உடம்பு நடுங்கிற்று.

கிழவன், ''பைத்தியமே! ஏன் இப்படி நடுங்குகிறாய்? பொன்னன் சண்டைக்குப் போகமாட்டான். அவனை மகாராஜா அழைத்துக் கொண்டு போக மாட்டார். என் குடும்பத்துக்கு நேர்ந்த பெரிய விபத்து மகாராஜாவுக்குத் தெரியும். என் குலத்தை வளர்க்க நீ ஒருத்திதான் இருக்கிறாய் என்றும் தெரியும். ஆகையால்தான் பொன்னனைச் சண்டைக்கு வரவேண்டாம் என்கிறார். நிச்சயமாக அழைத்துப் போகமாட்டார்!'' என்றான்.

அச்சமயம் வாசலில் முரசடிக்கும் சத்தம் கேட்டது. பின்வருமாறு கூவும் குரலும் கேட்டது: ''வெற்றிவேல்! வீரவேல்! யுத்தம் வருகுது! யுத்தம் வருகுது! சோழ தேசத்தின் மானத்தைக் காக்க யுத்தம் வருகுது! படையிலே சேர்வதற்கு மீசை முளைத்த ஆண்பிள்ளைகள் எல்லாரும் வரலாம்.

அட்டைப்பட விளக்கம்



**முகத்தின் எழில்**

**நேர் எதிர் நோக்கின் முழுநிலவாம்**
**வார் குழல் விலகிடும் கார்முகிலாம்**
**பார்வை திரும்பிடில் பிறை மதியாம்**
**சேர்ந்த புன்னகை சிலிர் காற்றும்.**

மேலட்டை வண்ணப்படம்
**- சரஸ்வதி சந்தியமூர்த்தி.**

---

நொண்டி, குருடு, சப்பாணி, ஒரு தாய்க்கு ஒரு பிள்ளை இவர்களைத் தவிர மற்றவர்களெல்லாரும் வரலாம். உடம்பிலே சுத்த ரத்தம் ஓடுகிறவர்கள் எல்லாரும் வரலாம். வெற்றிவேல்! வீர வேல்!'' — இதைத் தொடர்ந்து முரசின் சத்தம் ஊர் அதிரும்படி எழுந்தது.

இந்தப் போர் முழக்கத்தைக் கேட்ட வள்ளியும் கிழவனும் தெருப் பக்கம் சென்றார்கள். முரசு—யானையும் அதைச் சுற்றிச் சில வீரர்களும் போய்க் கொண்டிருந்தார்கள். முரசும் முரசு அடித்தவனும் அறை கூவியவனும் யானை மேல் இருந்தனர். இந்த ஊர்வலம் தெருக் கோடி போகும் வரையில் பாட்டனும் பேத்தியும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

ஊர்வலம் தெருக்கோடியில் திரும்பியதும் கிழவன் ஒரு பெருமூச்சு விட்டு விட்டுச் சொன்னான்: ''வள்ளி! உன்னைப் பொன்னனும் பகவானும் காப்பாற்றுவார்கள். இந்த யுத்தத்தில் சேர்ந்து வீர சொர்க்கம் அடைய என் குடும்பத்திலே வேறு யாரும் இல்லை! நான் தான் போகப் போகிறேன்'' என்றான்.

தெற்கு வானத்தில் திடீரென்று ஒரு நட்சத்திரம் நிலைபெயர்ந்தது. ஒரு விநாடி நேரம் அது பளிச்சென்று ஒளி வீசி வானவெளியில் வேகமாகப் பிரயாணம் செய்தது; அடுத்த விநாடி மாயமாய் மறைந்தது.

இதைப் பார்த்த வள்ளிக்கு உடம்பு சிலிர்த்தது.

அதே சமயத்தில் அதே காட்சியைப் பொன்னனும் பார்த்து உடல் சிலிர்த்தான்.

அப்போது அவன் உறையூர் ராஜவீதிகளின் வழியாகப் போய்க் கொண்டிருந்தான்.

பௌர்ணமிக்கு இன்னும் நாலு தினங்கள்தான் இருந்தன. சுக்கில பட்சத்துச் சந்திரன் வானவெளியில் ராஜஹம்சத்தைப் போல் சஞ்சரித்து வெள்ளி நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். உறையூரின் மாடமாளிகைகளெல்லாம் அந்த வெண்ணிலவில் ஒளியும் மோகனமும் பெற்றுச் சொப்பன லோகம் போல் காட்சி அளித்தன.

''ஓடம் வண்டியில் ஏறும்; வண்டி ஓடத்தில் ஏறும்'' என்று சொல்வது உண்டல்லவா? இந்தக் காலத்தில் திருச்சிராப்பள்ளி பெரிய நகரமாயும் உறையூர் சிற்றூராயுமிருக்கிறது. அந்த நாளிலோ உறையூர்தான் தலைநகரம்; சிராப்பள்ளி சிற்றூர். இரண்டு ஊர்களுக்கும் நடுவில் இடைவெளியில்லாமல் கடை வீதிகளும், பல வகைத் தொழில்கள் செய்யும் மக்கள் வாழ்ந்த தெருக்களும் இருந்தன. சிராப்பள்ளி மலையிலிருந்து மகாராஜா இறங்கி வந்து சேர்வதற்கு முன்னால் பொன்னன் அரண்மனை வாசலை அடைந்துவிட விரும்பினான்.

மகாராஜா சுவாமி தரிசனம் செய்து விட்டு மலை உச்சியிலிருந்து இறங்கி வரும்போது வழியில் நின்று இளவரசருக்கு என்னத்தைக் காட்டியிருப்பார் என்பது அவனுக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. அங்கேதான் சோழ வம்சத்தின் அவமானச் சின்னங்கள் இருந்தன. பார்த்திப மகாராஜாவின் தந்தை, மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் முன்னால் வாளையும் வில்லையும் வைத்து அடி பணிந்து, விதம் விதமான இரத்தினங்களையும் ஆபரணங்களையும் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக் கொள்ளும் காட்சி அங்கே சித்திரிக்கப் பட்டிருந்தது. அதை நினைக்கும்போதே பொன்னனுக்கு இரத்தம் கொதித்தது. ''சோழ நாடு இந்த அவமானத்தை எத்தனை நாளைக்குச் சகித்துக் கொண்டிருப்பது? யுத்த களத்தில் பல்லவர்களின் இரத்தத்தைப் பெருக்கி இந்த அவமானத்தைத் துடைத்துக் கொள்ள வேண்டாமா?'' என்று எத்தனையோ முறை பொன்னன் சிந்தித்ததுண்டு. அப்படிப்பட்ட சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டிருக்கும்போது, தான் மட்டும் யுத்தத்துக்குப் போகாமல் வீட்டில் முக்காடு இட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதா?— இவ்விதம் யோசித்துக் கொண்டே பொன்னன் விரைவாக நடந்து சென்றான்.

(தொடரும்)

நிறைய 'சஸ்பென்ஸ்' இருக்க வேண்டும் என்பதற்காகத் திரைக் கதையில் என்னத்தையெல்லாமோ சேர்த்துத் தொலைத்து விட்டார்கள்.

பிரபல டாக்டர் வைத்தியநாதன் குடி வெறியில் ஒரு நாள் தம் ஆசை நாயகிக்குத் தவறான இன்ஜெக்ஷனைக் கொடுக்க, அவள் இறந்து விடுகிறாள். நர்ஸ் நீலாவின் மேல் அந்தக் கொலைக் குற்றத்தைச் சுமத்தி விட்டுத் தப்பித்துக் கொள்கிறார் டாக்டர். நீலா சிறைத் தண்டனையை அனுபவித்து விட்டு மீண்டும் வந்து நடனம் பயின்று மேடைகளில் ஆடுகிறாள். பணக்கார வாலிபன் ஒருவன் அவளைக் காதலிக்கிறான். அதற்குப் பிறகுதான் சிக்கல் ஏற்படுகிறது. அந்த வாலிபனின் தந்தை பிரபல டாக்டர் வைத்தியநாதனாயிருந்ததுதான் சிக்கலுக்குக் காரணம். கதாசிரியர் படம் பார்ப்பவர்களை இலேசில் விடுவதாயில்லை.

திரைக் கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புக்களையும் வகிப்பவர் ஏ.சி. திரிலோகசந்தர்.

கதாநாயகன் சிவகுமாருக்கு ஆஸ்பத்திரியில் கட்டுப் போட்டுக் கொண்டு கிடக்க நேர்ந்தாலும் ஜெயச்சித்ரா, ஸ்ரீப்ரியா இருவரையும் மணந்து கொள்ளச் 'சான்ஸ்' கிடைக்கிறது.

ஜெயசித்ரா சோகமாகவும் மகிழ்ச்சியாகவும் மாறி மாறி நடித்து மன நிறைவைத் தருகிறார். அபாண்டமான பழி சுமத்தப்பட்ட போது அவர் முகபாவம் சபாஷ் பெறுகிறது. 'குழந்தைப் பெண்' ஸ்ரீப்ரியா, தான் விரும்பும் எந்தப் பொருளையும் யாருடனும் பகிர்ந்து கொள்ளத் துளியும் விரும்பாத ஒரு தனியான காரெக்டர். அதில் நன்றாக சோபிக்கிறார்.

''நீ இன்றி நான் இல்லை'' — ஒரு நல்ல தலைப்பைப் பாழாக்கி விட்டார்கள்.




## குமார விஜயம்...



புராணப் படமோ என்று பயம் கொள்ள வேண்டாம். அசல் சமூகப் படம்தான்; அதிலும் முழு நீள ஹாஸ்யப் படம். கதை கொஞ்சம் அழுத்தமாகவே பின்னப்பட்டிருக்கிறது. 'சஸ்பென்ஸ்', 'சர்ப்ரைஸ்' இரண்டும் கடைசி வரையில் திரைக் கதையுடன் பின்னப்பட்டிருக்கின்றன. இன்னும் என்ன வேண்டும்!

குடும்பத் தலைவர் இப்பொழுது மனைவி, குழந்தைகளோடு வாழ்ந்து வந்தாலும், தம் பூர்வாசிரமத்தில், வேறொருத்தியுடன் தொடர்பு கொண்டு அவளைத் தாயாக்கி விட்டு, அத்துடன் அவளைக் கைவிட்டு ஊரை விட்டே ஓடிவிட்டவர். இந்த நிகழ்ச்சியையே ஒரு கெட்ட கனவாக மறந்துவிட்டுப் பெரிய மனிதராக அவர் நடித்துக் கொண்டிருந்த காலத்தில்தான் அவருக்குப் பிறந்தவர்களாகச் சொல்லிக் கொண்டு நிர்மலாவும் குமாரும் அவரிடம் வந்து சேருகின்றனர். அவர்கள் இருவரில் ஒருவர்தான் நிச்சயம் அவருக்குப் பிறந்தவராக இருக்க முடியும். இந்தக் குழப்பம்தான் திரைக் கதையின் ஆதார கருதி. இந்த 'சஸ்பென்ஸ்' கடைசியில் தெளிவாகும் போது படமும் முடிந்துவிடுகிறது.

குடும்பத் தலைவராக வி. கே. ராமசாமி தமக்கே உரிய இயல்பான நகைச்சுவை நடிப்புத் திறமையினால் வெளுத்து வாங்குகிறார். ரசிகர்களுக்கு மன நிறைவைத் தருகிறார்.

கமலஹாஸனின் துடிப்புமிக்க நடிப்பு நன்றாயிருக்கிறது. அவரும் ஜெயசித்ராவும் இளந் தலைமுறையினரின் மனம் குளிர நடித்திருப்பதோடு வயோதிக தம்பதி வேடத்தில் வந்து தங்கள் நடிப்பாற்றலை நன்கு வெளிப்படுத்தியிருக்கின்றனர்.

தேங்காய் சீனிவாசன் நகைச்சுவை விருந்துக்கு மிக மிக உறுதுணையாயிருந்து, தேங்காய் உடைப்பது போல் 'டாண் டாண்' என்று ஹாஸ்யங்களை உடைத்துத் தள்ளியிருக்கிறார்.

காட்சிகளை மிகவும் விறுவிறுப்பாக இயக்கிப் படத்துக்குத் தனிச் சிறப்பை அளித்திருக்கிறார் டைரக்டர் ஜகந்நாதன்.

நகைச்சுவை என்று சொல்லிக் கொண்டு படத்தை வெறும் கேலிக்கூத்தாக்கிவிடாமல், கதையையும் சேர்த்துக் கொண்டிருப்பது படத்துக்குத் தனிச் சிறப்பைத் தருகிறது.

''குமார விஜயம்'' — பார்த்து, சிரித்து மகிழலாம்.

— காந்தன்

# அவர்கள் காத்திருக்கிறார்கள்

ஞ. வேங்கடரமணி



மனிதனுக்குக் கோபம் எப்பொழுது வரும்? யாரால் சொல்ல முடியும்? உணர்வின் ஆதாரமான உயிர் அணுக்கள் சலனப்பட்டு எந்த விநாடியும் ஒரு சாதாரண மனிதன் தன் வசமிழந்து போய்விடலாம். அந்தச் சலனம் மிக அற்பமான காரணத்திலிருந்து, தன் மானத்தின் அழிவு போன்ற மிகப் பெரிய பாதிப்பு வரை எதனால் வேண்டுமானாலும் நிகழலாம். ஆனால் பஞ்சாமிக்கு ஏன் அப்போது கோபம் வந்தது? அவர் சாதாரணமான மனிதர் இல்லையே!

கல்யாணக் கூடம். நாதசுவர இசை வந்து நிரப்பிக் கொண்டேயிருக்கிறது. மண்டபம் முழுவதும் ஆண்களும் பெண்களும் நிரம்பியிருக்கிறார்கள். எல்லாரும் பெரிய மனிதர்கள்; பதவியும் அந்தஸ்தும், செல்வாக்கும் செழுமையும் நிரம்பிய கூட்டம். ஈசுவரன் பெரிய பதவியில் இருக்கிறவர். ஒரே பெண். பணத்தை அலட்சியமாக அள்ளிவிட்டுக் கல்யாணம் செய்கிறார். மணமகன் அமெரிக்காவில் டாலர் மழையில் நனையும் விஞ்ஞானி. அறிவிலும் ஆராய்ச்சியிலும் கொடிகட்டிப் பறக்கிறவன். ஆனால் மந்திரங்களில் அவன் காட்டிய அக்கறை அதிசயிக்க வைத்தது. ஒவ்வொரு வாக்கியத்துக்கும் அர்த்தம், தாத்பர்யம் என்ன என்று கேட்டுக்கொண்டே இருந்தான். பஞ்சாமி ஈசுவரனின் குடும்பத்துக்குப் பரம்பரையாக உபாத்தியாயம் செய்து வைப்பவர். பாடசாலையில் மொந்தை உருப் போட்டுப் பொட்டைப் பாடமாகப் படித்தவரல்ல, பஞ்சாமி. வேதம், சாஸ்திரம், மந்திரம் எதிலும் ஆத்மார்த்தமான லயிப்போடு கற்றுக்கொண்டவர். இரண்டு ஸூக்தம் தடங்கல் இல்லாமல் உபாத்தியாயம் செய்து வைக்கும் திறமை உள்ளவர்.

திருமாங்கல்யதாரணம் முடிகிறது. மேலே ஒவ்வொரு காரியமும் நடந்து கொண்டே போகின்றது. ஆச்சாரிய சம்பாவனை — பஞ்சாமி கம்பீரமாக எழுந்து நிற்கிறார். மணமக்களை எழுந்து நிற்கச் சொல்கிறார். கூட ஒவ்வொருவராக எழுந்திருக்கிறார்கள். 'சந்யாசிகளை ஆதரிக்கிறது குடும்பஸ்தனுடைய தர்மம். சந்யாசிகள் லோகமெல்லாம் க்ஷேமமாய் இருக்கணும் என்கிறதுக்காக வாழ்கிறவர்கள்' என்று சொல்லிவிட்டு எதிரே பார்க்கிறார். சுவரில் உயரத்தில் மாட்டியிருக்கிற படம் அவர் பார்வையில் படுகிறது.

பெரிய படம். அதில் கருணையே உருவமாகி, தம் பார்வையிலேயே வற்றாத கருணையைத் தேக்கிக் கொண்டு அமர்ந்திருக்கும் துறவியைப் பார்க்கிறார். நெஞ்சம் தழுதழுக்கிறது. அவருடைய கம்பீரமான குரல் கம்மிப் போகிறது. ஒரு குழந்தையின் வாத்ஸல்யத்தோடு அவர் பஞ்சாதியைச் சொல்ல ஆரம்பித்தார். சொல்லி முடித்தபோது மனம் படபடத்தது. இதயத்தில் ரத்தம் குப்பென்று பாய்ந்தது. பஞ்சாமியைத் தன்னையே மறந்த நிலை ஆட்கொண்டு விட்டது.

"ஒரே ஒரு விஷயம் சொல்லப் போகிறேன். எல்லாரும் தயவுசெய்து கேட்கவேணும்" என்றார் பஞ்சாமி.

அவருக்குள் நிகழ்ந்து கொண்டிருந்த போராட்டம் யாருக்குத் தெரியும்?

கீழே உட்காரப் போனவர்கள் புரியாமல் குழம்பி நின்றார்கள். பஞ்சாமி மேலே தொடர்ந்தார்:

"நாம் எல்லோரும் நம்முடைய ஆசார்யாளை மதிக்கிறதாகவும் அவருடைய அனுக்

ரகத்தை வேண்டிக் கொண்டிருக்கிறதாக வும் சொல்லிக் கொள்கிறோம். ஆனால் அது எத்தனை பெரிய பொய்? எவ்வளவு பெரிய அபசாரம்?''

அந்த விநாடியில்தான் பஞ்சாமிக்குக் கோபம் வந்தது.

''நெஞ்சைத் தொட்டுப் பாருங்கள். வர தட்சிணை வாங்காமல் இருக்கோமா? பட்டுப் புடவை வாங்காமல் இருக்கோமா? வசதி இருக்கிறவாள் தற்பெருமைக்காகச் செய்கிற காரியம் நம்ம சமூகத்தையே பாதிக்கிறதை நினைச்சுப் பார்க்க வேண்டாமா? நம்முடைய தேசமே நாசமாய்ப் போகிறதை நினைச்சுப் பார்க்கக் கூடாதா?—''

சுகவரன் பாய்ந்து ஓடி வந்து அவருடைய கையைப் பிடிக்கிறார்.

''பஞ்சாமி! இதெல்லாம் பேச இதுவா நேரம்? பேசாமல் உட்கார்ந்து மேலே நடக்க வேண்டியதைப் பாருங்கோ. நீயும் நானும் கிராமத்தில் ஒன்றாக வளர்ந்து விளையாடின வர்கள். ஆனால் நீ குரு ஸ்தானத்தில் இருக் கிறவன் என்று மரியாதை கொடுத்தேன்.'' சுகவரனுக்கு ஆத்திரம் வந்தது.

''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி யாகி விட்டது. இங்கே இருக்கிறவர்களிலே யாராவது ஒருத்தர் இதைப் பற்றிச் சிந்திக்கப் பார்க்கட்டும். அவ்வளவுதான்.'' பஞ்சாமி தம் அங்கவஸ்திரத்தை உதறிப் போர்த்திக் கொண்டார். பக்கத்தில் இருந்தவர்களிடம் மேலே நடக்க வேண்டியவைகளைப் பார்த்துக் கொள்ளச் சொன்னார்.

திகைப்போடு அவரையே பார்த்துக்கொண் டிருந்த மாப்பிள்ளையிடம் விடை பெற்றுக் கொண்டார்.

''உங்களுக்கு என்ன குறை? தயவுசெய்து சொல்லுங்கள். ஏதாவது தவறு நேர்ந்திருந் தால் மன்னித்து விடுங்கள்'' என்றான் மண மகன்.

''எனக்கு எந்தக் குறையும் இல்லை.''

''அப்படியானால் ஏன் பாதியில் புறப்படு கிறீர்கள்? உங்களுக்கு என் நன்றியைத் தெரி வித்துக் கொள்ளக்கூட நேரமில்லை.''

''இல்லை, இல்லை! நான்தான் உங்களுக்கு நன்றி சொல்லணும். விவாகம்நடக்கிறபோது சொல் லுகிற மந்திரம் அத்தனைக்கும்

## அமரர் கல்கி நினைவுச் சிறு கதைப் போட்டி



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் :

1. பஞ்சப் பிரதேசத்தை நோக்கிச் செல்லும் பாசஞ்சர் வண்டி —இரா. குணசேகரன்
2. நியதி — எஸ். லட்சுமி சுப்பிரமணியம்
3. அணை உடைத்துக் கொண்டபோது — கமலநாபன்
4. அவர்களுக்குஅப்பா வேண்டும் ! — மைதிலி
5. விமோசனங்கள் — இரா. பகவானந்ததாசன்
6. துப்புக் கூலி — புலவர் அ. முத்தானந்தம்
7. இதயம் மாறினால்... — ஆர். பி. சாரதி
8. வேள்வித் தீ குளிர் காய்வதற்கு அல்ல ! — பிரதிபா ராஜகோபாலன்
9. அக்கினி மழை — கே. ராமசாமி
10. பூவும் நாரும் — இளம்வாணன்
11. மரம் — ஸ்ரீமதி லக்ஷ்மிரமணன்
12. நெருடல் — அன்னம்
13. களங்கம் — ராஜசியாமளா
14. எப்படிக் கணக்குக் கேட்பேன் ? — உஷா சுப்பிரமணியம்
15. லோல்ஜர் —பொன்னித்துறைவன்

அர்த்தம் கேட்டேன். சொன்னேன். நானும் அதைப் பற்றிச் சிந்தனை பண்ணினேன். பெண்ணைப் பெற்றவன் இத்தனை செலவு பண்ணி, வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் நடத்தணும் என்று எங்கேயும் இருக்கிறதாகத் தெரியவேயில்லே. இதைப் புரிஞ்சுக்க உங்களோட உதவியாலேதான் முடிஞ்சுது.''

பஞ்சாமி புறப்பட்டு விட்டார்.

அவர் வெளியேறிய இரண்டு நிமிஷங்களில் அங்கே நிலவிய பரபரப்பு ஒரு மாதிரியாக அடங்கியது. அவருக்கு அடுத்தபடியாய், அவருக்கு உதவியாக வந்திருந்த சாஸ்திரிகள் முன்னால் நகர்ந்து உட்கார்ந்தார்.

மணமகன் செயலற்றுப் போய் உட்கார்ந்திருந்தான்.

''பஞ்சாமி கெட்டிக்காரன்தான். ரொம்ப நல்ல மனுஷ்யர்தான். ஆனால் இன்னிக்கு என்னவோ அவருக்கு மூளை குழம்பிப் போச்சு. குறைஞ்சது இருநூறு ரூபாயாவது சம்பாவனை கிடைக்கும். அதைக் கெடுத்துக்கொண்டு போய்விட்டார்'' என்று அவனுடைய கவனத்தைத் தம் பக்கம் திருப்ப முயன்றார் புதிய சாஸ்திரிகள்.

மணமகன் ஒருமுறை வேகமாகத் தலையை அசைத்து விட்டுக் கொண்டு திரும்பினான்.

''உம்... நீங்க மேலே நடக்க வேண்டியதைப் பாருங்கோ'' என்று முடுக்கினார் சுகவரன்.

ரயிலில் ஏறி உட்கார்ந்த பஞ்சாமிக்கு உடம்பு முழுதும் ஒரே அசதியாக இருந்தது. கூட்டம் கூட அதிகமில்லே. நன்றாகச் சாய்ந்து கொண்டார். ஆனால் உறக்கம் வரவில்லை. இரவின் அமைதியின் நடுவே ரயில் 'தடக் தடக்'கென்று ஓடிக் கொண்டேயிருந்தது.

அவருடைய மனவெளியில் கிராமத்து வீடும், அதில் வசிக்கிற அவருடைய மனைவியும் மகளும் வந்து தோன்றினார்கள்.

''பட்டணம்தான் போறேள். அப்படியே கூட நாலு நாட்கள்தங்கி நம்ம ஜெயாவுக்கு ஏதாவது வரனைப் பார்த்துக் கொண்டு வாருங்கோ'' என்று சொல்லி யனுப்பினாள் அவர் மனைவி மங்களம்.

பஞ்சாமி நான்கு நாட்கள் தங்கவும் இல்லே. தாம் நடத்தி வைக்க வந்த கல்யாணத்தையே முழுதும் பூர்த்தி செய்யாமல் திரும்பிப் போகிறார். 'பெரிய இடத்துக் கல்யாணம்' என்று ஆவலோடு அவன் எதிர்பார்த்த வருமானம் கூட இல்லாமல் போய்விட்டது.

ஜெயா அவருடைய மூத்த மகள். உயர் நிலைப் பள்ளி வரை பிடிவாதமாகக் கஷ்டங்களை யெல்லாம் சகித்துக் கொண்டு படித்தாள். பஞ்சாமி கிராமத்தில் வாழும் வைதீகர். பந்து வீடுகளில் உபாத்தியாயம் செய்வது அவரது பூர்வீக உரிமை. அவரிடம் நல்ல ஞானம் இருந்தது. தெய்வத்திடம் பக்தியும், செய்யும் தொழிலில் மனம் நிறைந்த நம்பிக்கையும் இருந்தன. எதையும் ஆத்மார்த்தமாக, சிரத்தையோடு செய்தார். அவருடைய தொழிலில் நிறைய நெளிவு சுளிவுகள் உண்டு. ஆனால் பஞ்சாமி நெஞ்சறிந்து பிழை செய்ததில்லே. அவருடைய திறமையையும் சாஸ்திர ஞானத்தையும் அறிந்து கொண்டு பல பெரிய இடங்களில் ஹோமம், சாந்தி என்று நடத்தி வைக்க அழைப்பு வரும். பணத்தைப் பற்றிப் பேசத் தெரியாதவர் அவர். நடுவில் வேறே யாராவது அதை யெல்லாம் கவனித்துக் கொண்டு, பெரும் பகுதியையும் சுருட்டிக் கொண்டு போய்விடுவது வழக்கம். 'ஒரு நல்ல காரியத்தைச் செய்து வைத்தேன்' என்று திருப்திப்பட்டுக் கொண்டு வந்துவிடுவார் பஞ்சாமி.

பெரிய பெண் ஜெயாதான் குடும்பத்தையும் கவனித்துக் கொண்டு, படிப்பிலும் முன்னால் நின்றாள். அவள் கலை கலையாக மார்க் வாங்குவதையும் முகத்தில் சுடர் வீச விட்டில் தன்னுடைய மூன்று தம்பிகளையும் கவனித்துக் கொள்வதையும் பார்த்துப் பிரமித்துப் போவார் பஞ்சாமி. ஜெயாவுக்கு மேலே படிக்க வேண்டுமென்று அடங்காத ஆசை. அதைப் பஞ்சாமியிடமும் சொன்னாள்.

''நீ மேலே படித்து என்னம்மா செய்யப் போகிறாய்?'' என்று கேட்டார் பஞ்சாமி. அவருக்குப் பெண்ணின் அறிவில் அடங்காத பெருமை.

''நிறையப் படிப்பேன். பெரிய வேலைக்குப் போவேன். தம்பிகளை யெல்லாம் நன்றாகப் படிக்க வைப்பேன். அவர்களும் நல்ல உத்தியோகத்துக்குப் போவார்கள்.''

ஆனால் பஞ்சாமி மறுத்து விட்டார். மகளுக்கு உடனடியாகக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்பதுதான் அவருடைய இலட்சியமாக இருந்தது. ஆனால் அதற்கான முயற்சிகளைத் தொடங்கியபோதுதான் அதிலுள்ள சிரமம் தெரிய வந்தது. அவர் தேடிய சாதா

# இணையற்ற எழில்மேனி.
## மென்மை. வழவழப்பு. இயற்கையான வனப்பு.




ஆம், லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி எழிலுக்கு மெருகூட்டுகிறது. நீங்களே அதை உணர்ந்து மகிழ்வீர்கள். அதன் மயக்கும் நறுமணம். செழுமையான க்ரீம் இணைந்த நுரை. மேனியைப் பட்டுப்போன்று தழுவிச் செல்கிறது. லக்ஸ் ஸுப்ரீம் ப்யூடி க்ரீம் உங்கள் எழில் மேனியை மென்மையாகவும், வழவழப்பாகவும், இயற்கையான வனப்புடனும் வைக்கிறது.




வேறு எந்த சோப்பையும் பற்றிய சிந்தனையும் எழாது.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HLLS 1061

ரண வரன்கள்கூட எட்டாக் கொம்புகளாக இருந்தன. குறைந்தது பத்தாயிரம் ரூபாயாவது இல்லாமல் எதுவும் செய்ய முடியாது என்று பஞ்சாமி புரிந்துகொண்டார். ஜெயாவின் அழகு, அடக்கம், அறிவு எதுவும் ஒரு செல்வமாகப் பாராட்டப் படவில்லை.

'எத்தனை ஆயிரத்துக்குச் சீர் வரிசை செய்ய முடியும்? கையில் எத்தனை ரூபாய் கொடுப்பீர்கள்?' இந்தக் கேள்விகளில் பஞ்சாமி திணறினார். அவரும் கொஞ்சம் பணம் சேர்த்திருந்தார். அதைத் தம் மகளின் கல்யாணத்துக்குச் செலவு செய்யத் தயாராக இருந்தார். ஆனால் சமூகம் எத்தனை மோசமாகப் போய் விட்டது! பெண்ணைப் பெற்றவனைக் கசக்கிப் பிழிகிற கொடுமை நாளுக்கு நாள் தீவிரமாகப் போய்க் கொண்டே இருக்கிறதே!

பஞ்சாமியின் மனசில் ஒரு சிந்தனை வேர் விட்டு இறங்கியது.

வசதியுள்ளவர்கள் வாரிக் கொடுக்கிறார்கள்; பெருமையாகப் பேசுகிறார்கள்.

'எங்களிடம் இருக்கிறது, நாங்கள் செலவழிக்கிறோம்' என்று நியாயம் கூடப் பேசலாம். ஆனால் மற்றவர்களுக்கு அவர்கள்தான் உதாரணமாக இருக்கிறார்கள்.

'இது என்னோட — என் பெண் ஜெயா ஒருத்தியோட — விஷயம் மட்டும் இல்லை. உலகத்திலே ஆயிரம் பஞ்சாமிகள்; ஆயிரம் ஜெயாக்கள். இந்த நிலைமை எப்போது மாறும்? ஏழைகளாலும் நடுத்தரமானவர்களாலும் இதை மாற்ற முடியாது. வினையை விதைத்தவர்களாலேதான் அதை வெட்டி எறிய முடியும். அந்த வசதி படைத்தவர்களாலேதான் இதை மாற்ற முடியும். அவர்களே வேண்டாம் என்று சொல்லணும். சொல்வார்களா?'

பஞ்சாமி ஊர் வந்து சேர்ந்தார். மனச் சோர்வும் களைப்புமாக வீட்டுக்குள் நுழைந்து கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்தார்.

''ஏன் அதுக்குள்ளே வந்துட்டேள்?'' என்று கேட்டாள் மங்களம்.

''எல்லாம் அப்புறம் சொல்கிறேன்.''

ஜெயா ஓடிப்போய்ச் சூடான காப்பியுடன் வந்தாள். ''என்னப்பா உடம்பு சரியில்லையா?'' என்று கேட்டுக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகக் காப்பியைத் தம்ளரில் விட்டுக் கொடுத்தாள்.

''உடம்புக்கு ஒன்றும் இல்லேம்மா! இப்படி உட்கார். விவரமாகச் சொல்கிறேன்.''

பஞ்சாமி ஊஞ்சலில் தம் மகளுக்கும் இடம் கொடுத்தார். ''என்னை நீ புரிந்து கொள்ளுவாய் என்கிற நம்பிக்கை எனக்கு உண்டு'' என்று ஆரம்பித்தார். சென்னையில் ஈசுவரனின் பெண் கல்யாணத்தில் தமக்கு ஏற்பட்ட உணர்ச்சி வேகத்தையும் தம்மை மறந்து வந்துவிட்ட கோபத்தையும் விவரித்துச் சொன்னார்.

''ஈசுவரன் லட்ச ரூபாய் செலவழித்துக் கல்யாணம் பண்ணினார். அதனால் லட்சம் பேர்கள் பாதிக்கப்பட்டிருக்கலாம்'' என்று முடித்தார் பஞ்சாமி.

''புரிகிறது அப்பா!'' ஜெயா ஒரு தடவை பெருமூச்சு விட்டாள். அப்புறம் கேட்டாள்: ''அப்பா! ஈசுவரனின் ஆடம்பரம் அத்தனை பேரைப் பாதிச்சிருக்கும் என்று சொல்றேளே! உங்க கோபம் யாரையாவது பாதிச்சிருக்குமா?''

''அதைப் பற்றி நான் நினைச்சுப் பார்க்கவே யில்லை.''

''உண்மையாய், தன்னை மறந்து நீங்க சொல்லி யிருக்கிறதாலே, அந்தக் கோபம் சிலபேரையாவது பாதிக்கத்தான் இருக்கணும். ஆனால், அப்பா, அதைத் தாங்கிகிற தைரியம் இருக்கணும். அதை நிறைவேற்றுகிற தீவிரம் இருக்கணும். அதுதான் இங்கே ரொம்பப் பேருக்கு இல்லை, அப்பா! மனசு அளவிலே நல்லதைப் புரிஞ்சுக்கிறவா, அதை ஒரு விநாடி உணர்ச்சியோட மறந்து போயிடறா!''

ஜெயாவின் நெற்றியில் வியர்வை துளிர்த்தது. அவளுடைய முகம் தழலின் செம்மையைப் போல் ஜொலித்தது

பஞ்சாமி பரவசத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார். எதிரே இருப்பவள் பஞ்சாமி என்கிற இந்த நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்த வைதிகப் பிராமணனின் பெண்ணாகத் தோன்றவில்லை. ஏதோ ஒரு யுகத்தில் தீமையின் உருவமான அரக்கனைச் சம்காரம் செய்யும்.....

''அப்பாவும் பெண்ணும் சேர்ந்து காரியத்துக்கு உதவாத பேச்சையெல்லாம் ஆரம்பித்து விட்டீர்களாக்கும்'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் மங்களம்.

''அம்பிகே!'' என்று உத்தரத்தைப் பார்த்துச் சொன்னார் பஞ்சாமி.

ஜெயா எழுந்து போனாள்.

ஒரு மாதம் ஓடி விட்டது.

பஞ்சாமியின் உடலில் நாளுக்கு நாள் ஓய்ச்சலும் அசதியும் கூடிக்கொண்டே வந்தன. சித்திரை, வைகாசி, ஆனி...

கல்யாண மாதங்கள் கழிந்து கொண்டிருந்தன. பஞ்சாமி வைதிகத்துக்கு வெளியில் எங்கும் போகவில்லை. அவரை யாரும் அழைக்கவும் இல்லை. அவரைப் பற்றி ஓர் அபிப்பிராயம் வெளியில் பரவி விட்டது.

'ஈசுவரன் வீட்டுக் கல்யாணத்திலே ஒவ்வொரு பிராமணனுக்கும் இருபது ரூபா பூரி கொடுத்தார்களாம். துக்கிரி பஞ்சாமி ஏதோ அபஸ்வரமாப் பேசிவிட்டு ஓடி வந்து விட்டது. பிழைக்கத் தெரியாத மனுஷன். இவரை நல்ல இடத்துக்கு நல்ல காரியத்துக்கு அழைக்கவே கூடாது. இவரோட பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவேண்டும் ஒரே வயத்தெரிச்சல்' பஞ்சாமியே இதைத் தம் காதுகளால் கேட்டார்.

'அம்பிகே!' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார்.

ஒரு வெள்ளிக் கிழமை. ஆடி மாதத்தின் முதல் வெள்ளி. பஞ்சாமி சிரமத்தைப் பார்க்காமல் பூஜையை முடித்துவிட்டு ஜெயாவின்

---

**இறந்தபின் மருந்தா?**

முட்டாளுக்கு அறிவுரை சொல்வது இறந்தவனுக்கு மருந்து கொடுப்பது போல. — அமெரிக்கப் பழமொழி தகவல்: சாமி





**திறந்து மூடும் விழா!**

ஒரு பள்ளிக்கூடத்தைத் திறப்பவன், ஒரு சிறைச்சாலையை மூடியதற்குச் சமமாகக் கருதப் படுவான். விக்டர் ஹ்யூகோ -ராமு

---

கட்டாயத்துக்காகக் கொஞ்சம் ஆகாரம் சாப்பிட்டு விட்டு ஊஞ்சலில் படுத்தார். களைப்பில் உறக்கம் ஒரு மயக்கம் போல் அவரை ஆட்கொண்டிருந்தது. ஜெயா தாழ் வாரத்தில் ஏதோ படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

''தபால்'' என்ற குரல் அவளைக் கலைத்தது.

திண்ணையில் இரண்டு கடிதங்கள் போடப் பட்டிருந்தன. ஒன்று உள்நாட்டுத் தபால். அதன் முகவரியில் 'ஜெயா' என்று அவள் பெயர்தான் எழுதியிருந்தது.

அவள் எதிர்பார்த்த தபால் வந்து விட்டது. அவள் மனம் துள்ளியது. பரபரப்போடு அதைப் பிரித்துப் படித்தாள். ஒன்றுக்கு இரண்டு தடவை படித்து விட்டுக் கண்களை மூடிக் கற்பனையில் லயித்துப் போனாள்.

'அப்பாவிடம் சொல்லணும். இத்தனை நாட்களும் எப்படியோ மனசைக் கட்டுப்படுத்திக்கொண்டு இருந்து விட்டேன். அவரை எப்படியும் சம்மதிக்க வைத்து விடலாம். அவருடைய கவலை யெல்லாம் தீர்ந்து போயிடும்' — ஜெயா நினைவுப் பாதையோடு நெடுந் தூரம் போய்விட்டுத் திரும்பினாள்.

கண்களைத் திறந்ததும் மற்றொரு தபால் பார்வையில் தட்டுப்பட்டது.

அந்தக் கவரில் பெரிய பெரிய தபால் தலைகள் நிறைய ஒட்டப்பட்டிருந்தன. வெளி நாட்டுத் தபால். புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். —'ராகவன் இல்லினாய்ஸ், அமெரிக்கா' -ராகவனா? யார் இது? பஞ்சாமியின் பெயருக்குத்தான் எழுதப்பட்டிருந்தது.

''அப்பா, அப்பா!'' அவள் வீட்டுக்குள் ஓடினாள். தூங்கிக் கொண்டிருந்தவரை எழுப்பினாள்.

''என்னம்மா குழந்தை? தபாலா? யார் போட்டிருக்கா?''

''தெரியலையே அப்பா.''

''பிரித்துப் படியேன்.''

''—ராகவன் அநேக நமஸ்காரம்.

என்னை யாரென்று புரியாமல் குழம்பிப் போய்விடாமல் இருக்க ஆரம்பத்திலேயே சொல்லி விடுகிறேன். நான் ஈசுவரனுடைய மாப்பிள்ளை. என்னுடைய கல்யாணத்தைத் தான் நீங்கள் நடத்தி வைத்தீர்கள். நீங்கள் போன பிறகு உங்களைப் பற்றி, உங்களோடு வந்திருந்த சாஸ்திரிகளிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டேன். அன்று நீங்கள் சொன்னதை யெல்லாம் நன்றாகச் சிந்தித்துப் பார்த்தேன். நான் ஏதாவது செய்ய வேண்டும் என்று என் மனம் துடித்துக் கொண்டே இருந்தது. நான் ஏதாவது செய்ய முடியுமா என்று சிந்தித்துப் பார்த்தேன். ஒரு வழி தோன்றியது.

உங்களுக்குக் கல்யாண வயதில் ஒரு பெண் இருக்கிறாள் என்றும், அறிவும் அழகும் நிறைந்தவள் என்றும் அந்த சாஸ்திரிகளே தெரிவித்தார். எனக்கும் ஒரு தம்பி இருக்கிறான். சென்னையிலே ஒரு நல்ல வேலையில் இருக்கிறான். 'நீ ஒரு நல்ல காரியத்தை — ஒரு லட்சியத்துக்காக — செய்ய முடியுமா?' என்று அவனிடம் கேட்டேன். அவனும் உடனே ஒப்புக் கொண்டான். ஆனால் நான் அவசரப் படவில்லை. அவன் சிந்தித்து, மனப்பூர்வமாக அதைச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தேன். அதற்காக அவனுக்கு மூன்று மாத காலம் அவகாசம் கொடுத்தேன். அவன் உறுதி தளரவில்லை. நேற்று அவனிடமிருந்து கடிதம் வந்தது. இன்னும் இரண்டு வாரங்களில் அவன் அங்கே வருவான். அவனை நேரில் சந்தித்த பிறகு உங்கள் கருத்தைத் தெரிவியுங்கள். திருமணத்தை ஆடம்பரம் இல்லாமல் நடத்தி விடலாம். எல்லாச் செலவுகளையும் நான் ஏற்றுக் கொள்கிறேன்.''

''என்னடி கடிதாக? யார் போட்டிருக்கா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் மங்களம்.

''அம்பிகே!'' என்று சுவாமி அலமாரியை நோக்கிக் கைகூப்பினார் பஞ்சாமி.

அவரே தம் மனைவிக்கு எல்லாவற்றையும் விவரித்தார்.

''அப்பா—!'' ஜெயா குறுக்கிட்டாள்.

''என்னம்மா?''

''எனக்கு வேலைக்கு உத்தரவு வந்திருக்கு அப்பா!''

தனக்கு வந்திருந்த கடிதத்தை அவரிடம் கொடுத்தாள் ஜெயா.

''அப்பா! உங்களாலே இனிமேல் கஷ்டப் பட முடியாது. பட்டணத்திலே இருக்கிற, என்னோட படிச்ச சிநேகிதி மூலமா முயற்சி பண்ணினேன். அவள் நல்ல வேலையாக வாங்கிக் கொடுத்திருக்கிறாள். நாம் எல்லாரும் அங்கே போயிடலாம். இனிமேல் இந்தக் குடும்பத்தைக் காப்பாத்த வேண்டியது என்னோட கடமை அப்பா!''

''அப்போ, அப்படியானால்—''

அங்கே சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''எனக்கும் ஒரு லட்சியம் இருக்கக் கூடாதா?'' என்று கேட்டாள் ஜெயா.

''சீ அசடே! பேசாமல் இரும்மா'' என்று தாய் மகளை அடக்கினாள்.

''அப்பா!'' என்று ஆவலோடு அவர் முகத்தில் சம்மதத்தைத் தேடினாள் ஜெயா.

ஆனால் பஞ்சாமியின் மௌனம் கலைய வில்லை.

''சொல்லுங்கோ அப்பா!''

''உம்... அந்தப் பையன் வரட்டும். அவனையே கேட்போம். ஒருகால் உன் லட்சியத்தையும் அவன் ஏற்றுக் கொள்ளலாம். கல்யாணத்துக்குப் பிறகும் நீ வேலை பார்க்க அவன் சம்மதிக்கலாம்.''

அவர்கள் காத்திருந்தார்கள்.

'என்னைப் போல் இன்னும் எத்தனையோ ஜெயாக்கள். என் அப்பாவைப் போல் இங்கே இன்னும் எத்தனையோ பஞ்சாமிகள். அவர்கள் எல்லாரும் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.'

ஜெயா தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

# சிவப்பு ரோஜாவைப் போல் செக்கச் செவேல்

**அந்த ஒளிவண்ணச் சிறப்பு, அந்தச் சிவப்பு, அதே மலர்வனப்பு - அவ்வளவும் உமக்கென அடங்கியது சிங்கார் குங்கும் பொட்டு - சிகப்பின் சிகரமான குங்கும்**

• உசிதமான பொருள்களைத் தேர்ந்தெடுத்து உரியவாறு கலவை செய்த பலன், வேறெந்தக் குங்குமமையும் விட அதிகச் சிவப்பையும் வண்ணச் சிறப்பையும் தருகிறது உங்களுக்கு. • சிந்தை கவரும் வேறு பல சாயல்களிலும் கிடைக்கிறது சிங்கார்...பணிவான ரகம், பளிச்சிடும் ரகம், மற்றும் பவுடர்.

• நூற்றுக்கு 100 நம்பிக்கைக்குரியவை சிங்கார் குங்கும் பொட்டு ரகங்கள் எல்லாமே கறாரான தரக் கட்டுப்பாட்டுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டவை. • ஒவ்வொரு சிங்கார் பேக்குக்கும் போலிகள் பல வந்துவிட்டன சந்தையிலே. எனவே, சிங்கார் என்ற பெயர் இருக்கிறதா என்று கவனித்து வாங்குக.




## சிங்கார்

பாரத நாட்டின் உச்ச விற்பனையுடைய ஒப்பிலாக் குங்கும் திலகம்

பாரமவுண்ட் பிராடக்ட்ஸ்,
பிரசாத் சேம்பர்ஸ், பம்பாய் 400 004

everest/392/SP-tm





# புது உலகம் கண்டேன்!

## 7. நாடு, மொழி, மக்கள், கல்வி, சமூகம்

சோவியத் மக்களின் கல்வி கலாசாரம் சமூகம் முதலிய அம்சங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன் அந்த நாட்டையும் அதன் அமைப்பையும் அந்நாட்டின் உட்பிரிவுகளையும் பற்றி முதலில் ஓரளவு அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. பதினைந்து சம அந்தஸ்துள்ள சோஷலிஸக் குடியரசுகளை உள்ளடக்கிய சோவியத் யூனியன் (Union of Soviet Socialist Republics) கிழக்கு ஐரோப்பாவிலும் ஆசியாவின் வடக்குப் பகுதியிலும் மத்தியப் பகுதியிலுமாக 22,400,000 சதுரக் கிலோ மீட்டர் பரப்பளவில் அமைந்திருக்கிறது. ஐரோப்பாவில் சரி பாதியும், ஆசியாவில் மூன்றில் ஒரு பங்குமாக அது பரந்திருக்கிறது. வடகிழக்காக 5000 கிலோமீட்டர்களும் தென் வடலாக 10,000 கிலோமீட்டர்களும் விரிந்திருக்கிறது. மொத்தத்தில் மூன்றில் இரண்டு பங்கு எல்லைப்புறம் (60,000 கி. மீ. மொத்த அளவு) கடற்புறத்தைக் கொண்டுள்ளது. அமெரிக்காவை விட இரண்டரை மடங்கும், இந்தியாவை விட ஏழு மடங்கும் பெரிய நிலப்பரப்பை உடையது சோவியத் யூனியன்.

நேரங்கள் வித்தியாசப்படுகிற உலகின் 24 கால எல்லைகளில் (Time Zones) பதினொன்று சோவியத் யூனியனுக்குள் இருக்கின்றன. மாஸ்கோவில் டின்னருக்கு அமரும் அதே சமயம் அந்நாட்டின் மற்றொரு கோடியில் உள்ள சகாலின் தீவில் (Sakhalin Island) தேநீர் குடிக்கிற நேரமாகப் பொழுது புலர்ந்து கொண்டிருக்கும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். அவ்வளவு பெரிய தேசம்!

1917ல் புகழ் பெற்ற அக்டோபர் புரட்சியின்போது 163 மில்லியன்களாக இருந்த





**ஓய்வு :**
விடுமுறை தினத்தில் கடற்கரைக்கு வந்த உல்லாசக் கூட்டம்.

**கல்வி :**
ருஷ்யக் குழந்தைகள் இலவசமாகப் பெறும் கட்டாயக் கல்வி எல்லா நவீன உத்திகளையும் கையாண்டு வழங்கப்படுகிற உயர்தரமான ஒன்று.

**குடும்பம் :**
குறைவற்ற அடிப்படை வசதிகளுடன் இல்லங்கள் திகழ்கின்றன. ருஷ்யாவில் குடும்பப் பற்றும் பாசமும் மிகுதி.

**உழைப்பு :**
ருஷ்யக் கூட்டுப் பண்ணையில் தேயிலை பறிக்கிறார்கள்.

நா. பார்த்தசாரதி

சோவியத் யூனியன் மக்கள் தொகை 1974 லேயே 250 மில்லியன்களைத் தாண்டி விட்டது. அதே ஆண்டில் எடுக்கப்பட்ட கணக்கின்படி ஆண்களை விடப் பெண்களின் தொகை 18.5 மில்லியன் அதிகம். சராசரியாக ஒரு சதுர கிலோமீட்டருக்கு 11.2 பேர் வீதம் வசிக்கிறார்கள். 1917க்கு முன் ஐந்தில் ஒரு பங்கு மக்களே நகரவாசிகளாக இருந்த நிலை மாறி இன்று மொத்த மக்கள் தொகையில் 60 சதவிகிதம் பேர் ரஷ்ய நகரங்களில் வசிக்கிறார்கள்.

1917 அக்டோபர் புரட்சிக்கு முந்திய சோவியத் யூனியனில் ஒரு லட்சம் மக்களுக்கு மேல் வசிக்கும் பெரிய நகரங்கள் 29 மட்டும்தான் இருந்தன. 1974ல் அந்த நகரங்களின் எண்ணிக்கை 236 ஆயிற்று. 1980ல் மூன்றில் இரண்டு பங்கு சோவியத் மக்கள் நகரவாசிகளாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதற்குள் அவ்வளவு தூரம் நகர வசதிகள் முன்னேறிவிடும்.

சோவியத் நாடு முழுவதும் முதன்மை மொழி ரஷ்யன். பிரதேச மொழிகள் இரண்டாவது இடத்தையும் பங்கையும் பெறுகின்றன. ரஷ்ய மொழி முதன்மை மொழியாக இருப்பதனால் பிரதேச மொழிகளின் நலனோ வளர்ச்சியோ எந்த வகையிலும் பாதிக்கப்படவில்லை. ஒவ்வொரு சோவியத் சோஷலிசக் குடியரசின் சொந்த மொழியிலும் தனித்தனியே வளமான இலக்கியங்கள் செழித்திருக்கின்றன. இஷ்டமான மொழியில் கற்க உரிமை உண்டு.

ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானிஷ் முதலிய மேற்கத்திய மொழிகளையும் கீழைக்காசிய மொழிகளையும் முறையாகக் கற்பதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆயினும் முக்கிய நகரங்களில் கூட அறிவிப்புப் பலகைகள், பிரசுரங்கள் எல்லாம் பெரும்பாலும் ரஷ்யனிலேயே இருப்பதால் ரஷ்ய மொழி தெரியாதவர்கள் மொழிபெயர்ப்பாளர் துணையின்றி எங்கும் செல்ல



முடியாது. விமான நிலையங்கள், சர்வதேசப் பயணிகள் தங்கும் ஹோட்டல்களில் மட்டும் விண்ணப்ப பாரங்களிலும் பிரசுரங்களிலும் மெனு கார்டுகளிலும் ஆங்கிலமும் சேர்க்கப் பட்டிருக்கும். மற்றபடி பொதுவாக ரயிலில் பஸ்ஸில் அல்லது டாக்ஸி டிரைவரிடம் ஆங்கிலத்தில் பேசி நீங்கள் நினைப்பதை உணர்த்தவோ, அவர்கள் நினைப்பதைப் புரிந்து கொள்ளவோ முடியாது. ஆனால் டாக்ஸியில் போக வேண்டிய இடத்தின் பெயரை மட்டும் சொல்லி ஜாடை காட்டினால் டிரைவர்கள் புரிந்து கொள்வார்கள். 'செல்ஃப் சர்வீஸ்' செய்து கொள்ளும் உணவு விடுதிகளிலோ ரஷ்யனோடு ஆங்கிலத்திலும் உணவுப் பட்டியல் உள்ள பெரிய ஹோட்டல்களிலோ சமாளித்துக் கொள்ள முடியும். இதைவிட வசதியானது அத்தியாவசியத் தேவைக்கான ரஷ்ய வார்த்தைகளையும், தொடர்களையும் கற்றுக் கொள்வதுதான். மொழிப் பிரச்னை என்பது ஒரு சுற்றுப் பிரயாணியைப் பொறுத்தவரை ஐரோப்பாவில் பல நாடுகளில் உண்டு. லண்டனில் இருந்து முக்கால் மணி நேர விமானப் பயணத்தில் போய்ச் சேர்ந்துவிட முடிந்த பாரிஸ்க்கூட ஆங்கிலம் பேசினால் முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விடுகிறார்கள். ஐரோப்பா முழுவதும் சுற்றிப் பார்க்க ஆங்கிலம் மட்டும் தெரிந்திருந்தால் போதும் என்ற காலம் மலையேறிப் போய் விட்டது. ஆனால் ஆங்கிலமும் சமயோசித உணர்வும் உள்ள ஒருவன் ஐரோப்பா முழுவதும் சமாளித்துக் கொள்ள முடியும். மொழியை உபயோகித்துப் பேசித்தான் காரியங்கள் நடக்க வேண்டும் என்பதில்லை. பேச்சின் அவசியம் எல்லா இடங்களிலும் குறைந்து விட்டது.

சோவியத் யூனியனில் தனியாருக்குச் சொந்தமான கல்விக் கூடங்கள் அறவே கிடையாது. ஆரம்பப் பள்ளிக்கூடத்திலிருந்து பல்கலைக் கழகப் படிப்பு வரை அரசாங்கமே நடத்துகிறது. நாட்டு மக்களுக்குக் கல்வி வசதிகளில் சாதி மத இனப் பாகுபாடுகளைப் பொறுத்துத் தனியான சலுகைகள் என்று எதுவும் கிடையாது. யாவருக்கும் சமமான வசதிகள் செய்து தரப்பட்டிருக்கின்றன. எல்லா மட்டத்திலும் அனைத்து மக்களுக்கும் கல்வி வசதிகள் இலவசமாகச் செய்து தரப் பட்டிருக்கின்றன. 1975ம் ஆண்டு சோவியத் யூனியனில் எடுக்கப்பட்ட ஒரு புள்ளி விவரத்தின்படி மொத்த மக்கள் தொகையில் 99.7 சத விகிதத்தினர் படிப்பறிவு பெற்றிருக்கிறார்கள். பெண் கல்வி முழு அளவில் வளர்ந்து ஆண்களோடு சமத்துவம் பெற்றிருக்கிற நாடு சோவியத் யூனியன். படித்து வேலை பார்க்கும் பெண்களின் எண்ணிக்கை ஆண்களின் எண்ணிக்கையோடு சரி நிகர் சமமாக விளங்கும் அளவுக்குச் சோவியத் யூனியன் வளர்ச்சி பெற்றிருக்கிறது. ஏழு வயதுக்கு மேற்பட்ட சிறுவனோ சிறுமியோ ஏதாவது ஒரு கல்வி நிலையத்தில் சேர்ந்தே ஆக வேண்டும். அந்தந்தப் பிரதேச மொழிகளில் கற்பிக்கும் பள்ளிக்கூடங்களும் ரஷ்ய மொழியில் கற்பிக்கும் பள்ளிக்கூடங்களும் தனித்தனியாக உள்ளன. பெற்றோர் விரும்பிய பள்ளியில் சேர்க்கலாம். வயதில் மிகவும் குறைந்த குழந்தைகளுக்கு வைத்திய வசதி — விளையாட்டு வசதிகள் நிறைந்த குழந்தைகள் இல்லங்கள் (Children's Home) உள்ளன. கிண்டர் கார்ட்டனும், நர்ஸரிப் பள்ளிகளும் உண்டு.

ஆரம்ப உயர்தரக் கல்வித் துறைகளில் நாடு முழுவதும் ஒரே மாதிரியான அமைப்பும், திட்டமும் உள்ளன. சர்ச்சுக்கும் பிற மத ஸ்தாபனங்களுக்கும் கல்வி கற்பிப்பதில் எந்தச் சம்பந்தமும் கிடையாது. மனிதாபிமானம், சமூக ஒழுக்கம், மதச் சார்பின்மை— இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆண்களும் பெண்களும் சேர்ந்து கற்கிற வகையில் சோவியத் கல்விக் கூடங்கள் இயங்குகின்றன.

அவரவர்கள் திறமைக்கேற்ற சிறப்புக் கல்விகளைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு இருக்கிறது. சத்துணவு ஊட்டமும், வைத்திய வசதிகளும் இணைந்த கல்வியாக இருப்பதால் எந்தக் கல்விக் கூடத்தில் கற்கிற யாரைப் பார்த்தாலும் ஆரோக்கியமாகத் தென்படுகின்றனர். விடுமுறைக் காலங்களில் மாணவர்களுக்கு 1,100 வகை விசேடப் பயிற்சிகளைத் தருவதற்காக இயங்கும் 5,700 விடுமுறைக் கால முகாம்கள் சோவியத் யூனியன் முழுவதும் உள்ளன. செகண்டரி பள்ளிகளில் பொது செகண்டரி பள்ளிகள், சிறப்புப் பள்ளிகள் என இரு வகை.

உயர் பட்டப் படிப்புக்களுக்கான 60க்கு மேற்பட்ட பல்கலைக் கழகங்கள் உட்பட்ட 833 சிறப்பு இன்ஸ்டிட்யூட்டுகள் அங்கு உண்டு. சோவியத் பல்கலைக் கழகங்களில் மிகப் பெரியதாகிய அமைப்பு மாஸ்கோ பல்கலைக் கழகம். அதில் 4000 பேராசிரியர்களுக்கு மேல் பணி புரிகிறார்கள். 250 சோதனைச்சாலைகளுக்கு மேல் அங்கு உண்டு. 34 மாடிகளைக் கொண்ட அதன் பழைய கட்டிடமும், லெனின் குன்றுப் பகுதியில் (Lenin Hills) 160 ஹெக்டர் நிலப் பரப்பில் கட்டப்பட்டுள்ள புதுப் பகுதிகளும் சிறப்புற அமைந்திருக்கின்றன. அதன் 25000 அறைகளில் 6000 அறைகள் மாணவர்களுக்கான ஹாஸ்டல்களாகும். மாஸ்கோ பல்கலைக் கழக நூலகம் 6.5 மில்லியன் புத்தகங்களையும் உள்நாட்டு வெளி நாட்டு வெளியீடுகளையும், சஞ்சிகைகளையும், செய்தித் தாள்களையும் கொண்ட பிரம்மாண்டமான அமைப்பாக விளங்குகிறது. மாணவர்களுக்கு இந் நூல்நிலையம் மிகவும் பயன்பட்டு வருகிறது.

மாஸ்கோவில் உள்ள மற்றொரு பெரிய சர்வகலாசாலை 'பாட்ரிக் லுமும்பா ஃப்ரெண்ட்ஷிப் பல்கலைக் கழகம் (Patrich Lumumba Friendship University) ஆகும். இந்தப் பல்கலைக் கழகத்தில் பல வெளி நாட்டு மாணவர்களோடு நிறைய இந்திய மாணவர்களும் படிக்கிறார்கள். இங்கே தங்கிக் கற்கும் தமிழ்நாட்டு மாணவர்கள் பலரை மாஸ்கோவில் சந்தித்தேன். இந்தப் பல்கலைக் கழகம், ஆசிய, ஆப்பிரிக்க மாணவர்களுக்கும், தென் அமெரிக்க மாணவர்களுக்கும் உயர் கல்விக்கு உதவுவதற்காக நிறுவப்பட்டது. 80க்கு மேற்பட்ட நாடுகளைச் சேர்ந்த சுமார் 4000 மாணவர்கள் இங்கே மேற்படிப்புப் படிக்கிறார்கள். அப்படிப் படிப்பதற்கு அனுமதி பெற்று

---



**பூனை எப்போது சிங்கமாகும்?**

**எலிக்கு முன்னால் பூனை, ஒரு சிங்கத்துக்குச் சமம்.**

ரஷ்யப் பழமொழி -சாமி

வருகிற வெளிநாட்டு மாணவர்களுக்குச் சோவியத் யூனியனுக்குள் வருவதற்கான பயணச் செலவும், பட்டப் படிப்பு நிறைவேறியதும் தங்கள் தங்கள் நாடுகளுக்குத் திரும்புவதற்கான பயணச் செலவும், குளிர்கால உடை வசதிகளும் இலவசமாகத் தரப்படுகின்றன. மாதம் ஒன்றுக்கு 90 ரூபிள்கள் (100 யு. எஸ். டாலருக்கு இணையான மதிப்புள்ளது. கிட்டத்தட்ட 900 முதல் 1000 இந்திய ரூபாய்க்கு இணையானது) உதவித் தொகையாகவும் வழங்கப்படுகிறது. இந்தத் தொகையில் மாதா மாதம் மீதப் படுத்திச் சேமித்து அண்டை நாடுகளையும் சோவியத் யூனியனின் பிற பகுதிகளையும் சுற்றிப் பார்த்திருக்கிறார்கள் பல கெட்டிக்கார இந்திய மாணவர்கள்.

கல்வி மட்டுமின்றி வேலை வாய்ப்புகளும் எல்லாருக்கும் சமம். திண்ணை தூங்கிகளையோ வேலையற்றிருப்போரையோ எங்கும் காண முடியாது. சமூகத்தின் சகல துறையினரையும் பயனடையச் செய்யும் சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் (Social Security Schemes) நிறைய உள்ளன. வேலை பார்க்கிற பெண்களுக்கு முழுச் சம்பளத்துடன் 112 நாட்கள் பிரசவ கால லீவு தரப்படுகிறது. உடல் ஊனமுற்றோர்களுக்கும் வயோதிகர்களுக்கும் பென்ஷன் தரப்படுகிறது.

விவசாயத்துக்கான அரசாங்கப் பண்ணைகளிலும், கூட்டுப் பண்ணைகளிலும் (State Farms and collective Farms) வேலை பார்க்கும் ஆண்கள் 60 வயதிலும் பெண்கள் 55 வயதிலும் ஓய்வு பெறுகிறார்கள். நிலங்கள் அனைத்தும் அங்கே தேசிய உடைமையாகும். வேலை அளவுக்கும் தரத்துக்கும் தக்கபடி கூட்டுப் பண்ணையில் பணி புரிவோர் பயன் பெறுகிறார்கள். அடிப்படை மாத வருமானம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. 1973ல் எடுக்கப்பட்ட கணக்கின்படி 31,500 கூட்டுப் பண்ணைகளும், 16,000 அரசாங்கப் பண்ணைகளும் உள்ளன. பண்ணைகளின் உள்ளேயே வீடு, கால்நடை வளர்ப்பு வசதிகள் தரப்பட்டுள்ளன. ஓய்வு பெறும் பண்ணைத் தொழிலாளிகளுக்குப் பென்ஷன் உண்டு.

இளம் மாணவ மாணவிகளுக்கான முன்னோடி முகாம்கள் (Pioneer Camps) சோவியத் யூனியனில் சிறப்பாக அமைந்துள்ளன. இயற்கை அழகு மிக்க 'ஆர்டெக்' முகாம் மிகச் சிறப்பு வாய்ந்தது. உலகப் புகழ் பெற்றது. தேச விசுவாசமும், சர்வ தேச மனப்பான்மையும் உள்ள இளம் சமூகத்தை உருவாக்க இந்த முன்னோடி முகாம்கள் பயன்படுகின்றன. இளம் முன்னோடிகள் அமைப்பில் (Young Pioneer Organisations) உறுப்பினராக உள்ள இளைஞர்கள் 25 மில்லியனுக்கு மேல் இருக்கிறார்கள்.

சோவியத் மக்களின் குடும்ப வாழ்வு அன்பும் அமைதியும் நிறைந்தது. பற்றும் பாசமும் நிறைந்த தன்மை என்பது இந்தியக் குடும்ப வாழ்வுக்கும் சோவியத் குடும்ப வாழ்வுக்கும் பொதுவான தன்மை. சாதி, மத, இன மொழி பேதமின்றி அங்கு திருமணங்கள் நடக்கின்றன. திருமணச் சடங்குகள் மத ரீதியானவையல்ல. திருமணப் பதிவுக்குத் தனி அலுவலகங்கள் நாடு முழுவதும் உள்ளன. குறைந்தபட்சத் திருமண வயது பெரும்பாலான பகுதிகளில் 18 ஆகவும், சில குறிப்பிட்ட பகுதிகளில் 16 ஆகவும் நிர்ணயமாகி யிருக்கிறது. சமூகத்துக்கு உபயோகமான முறையில் குழந்தைகளை வளர்ப்பது பெற்றோர்களின் கடமையாக வற்புறுத்தப்பட்டுள்ளது.

பெரும் குடும்பங்களுக்கு அரசாங்க உதவிகள் — கல்வி மருத்துவ வசதிகளைப் பொறுத்துக் கிடைக்கும். சந்ததியினர் 55 வயதுக்குப் பின் தாயையும், 60 வயதுக்குப் பின் தந்தையையும் கவனித்துக் கொள்ள — பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். தகுந்த காரணம் கூறி மண விலக்கு கோர ஆண் பெண் இருவருக்குமே உரிமை உண்டு. எனினும் குழந்தைகள், மணவிலக்கு சம்பந்தமான சண்டைகள் அங்கு அதிகம் நேர்வதில்லை.

பொது மருத்துவ — ஆரோக்கிய வசதிகள் அடிப்படை உரிமையாகச் செய்து தரப்பட்டுள்ளன. மருந்துகள் மிகவும் மலிவு.

மருந்துகளின் சராசரி விலை என்பது 30ல் இருந்து 40 கோபெக்குகளுக்கு மேல் போகாது. (100 கோபெக்குகள் கொண்டது 1 ரூபிள்) சுமார் 50 சத விகித மருந்துகளை அரசாங்கமே இலவசமாக வழங்க ஏற்பாடு செய்துள்ளது. ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட இன்பேஷண்டுகளுக்கும், க்ஷயரோகிகளுக்கும், நீரிழிவுக்காரர்களுக்கும் ஓராண்டுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கும் மருந்துகள் இலவசம். யுத்தத்தினால் பாதிக்கப்பட்டவர்களுக்கும் இச்சலுகை உண்டு.

ஆரோக்கிய இல்லங்கள் (Health Resorts) நாடு முழுவதும் நிறைய உள்ளன. அங்கு சென்று பயன்பெறும் மக்களும் அதிகம். அங்கு கிடைக்கும் பயன்களும் அதிகம். ஆரோக்கியமான உணவு, ஆரோக்கியமான கல்வி, ஆரோக்கியமான வாழ்க்கை — எல்லாவற்றையும் விட ஆரோக்கியமான உள்ளம்— இவை சோவியத் மக்களின் பாக்கியங்களாக வாய்த்திருக்கின்றன. எதைக் குறை என்று சொல்வது? 'தங்களுக்கு என்ன குறை?' என்று கண்டுபிடிக்க முடியாத ஒன்றுதான் அவர்களுக்கு இன்றுள்ள ஒரே குறை என்று சொல்ல வேண்டும்!

## உள்ளதும் போச்சே!



கண் வலி கொண்டவன் குதிரை வைத்தியரிடம் போகவே அவன் மிருகங்களுக்கு அளிக்கும் மருந்தைக் கொடுத்தான். அதனால் இருந்த கண் பார்வையும் போய்விட்டது. அதிகாரியிடம் முறையிட்டான். நீதிபதி கூறியதாவது: "உன் பிராது செல்லாது. நீ கழுதையாக இல்லாமற் போனால் குதிரை வைத்தியனிடம் போயிருக்கமாட்டாய்."

--லா அதி - நன்றி: குமரிமலர்

'ஒளிரும்' வெண் சலவைக்கே






சுப்ரீம் டெட் டிடர்ஜெண்ட் சலவைக் கட்டி

தரத்தில் முன்னேற்றம் பெற்ற புதிய டெட் கட்டியே மார்க்கெட்டில் விற்பனையாகும் சுப்ரீம் டிடர்ஜெண்ட் கட்டி.

தூய்மையாக்கும் ஆற்றலுக்கு, நுரை வளத்திற்கு, நறுமணத்திற்கு, வேறு எந்த சலவைக் கட்டியும் இதற்கு ஈடாகாது!

உபயோகித்துப் பாருங்கள். அதன் வேறுபாட்டைக் கண்கூடாகக் காணுங்கள். ஆம் அதுதான் சுப்ரீம் டெட் கட்டி—'ஒளிரும்' வெண்மைக்கே!

பளிச்சிடும் வெண்மை,
டெட் தரும் வெண்மை

அமரர் கல்கி

## அத்தியாயம் 37

# கப்பல் போன்ற கார்

கல்யாணம் தனது காரின் ஹாரனை அழுத்தினான். இஞ்சின் போட்ட கடபுடா சத்தத்துக்கும் மேலாக அது, ''பாம்! பபாம்! பாம்'' என்று ஒலித்தது. அப்படி அவன் ஹாரனை உற்சாகமாக முழக்கியதற்குக் காரணம், சாலையின் குறுக்கே மாட்டு மந்தையோ அல்லது அதிகமான மனித நடமாட்டமோ இருந்ததால் அல்ல, தெரு ஓரத்தில் சென்று கொண்டிருந்த விகவின் கவனத்தைக் கவரவே.

விக ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டு அலட்சியமாக நடந்து கொண்டிருந்தான். அது கல்யாணத்தை வியப்பில் ஆழ்த்தியது. வழக்கமாகக் கல்யாணம் காரில் செல்வதைப் பார்த்தால், கை காட்டி நிறுத்தி, ''மாமா! மாமா! லிஃப்ட் மாமா? பள்ளிக்கூட வாசலில் விட வேண்டாம். அந்தத் தெரு முனையில் நிறுத்திண்டால் இறங்கிக்கறேன். நீங்க நேரே கோர்ட்டுக்கோ, கிளப்புக்கோ போய் விடலாம்'' என்று கெஞ்சுவான் விக. கல்யாணம் கம்மாவாவது சற்று நேரம் பிகு பண்ணிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு ஏற்றிக்கொள்வான். ஆனால் இன்று விக வண்டியை நிறுத்தாததுடன், கல்யாணம் அழைத்தும் திரும்பிப் பார்க்கவில்லை. 'என்ன திமிர் கர்வம் வந்து விட்டது இந்தப் பயலுக்கு? அல்லது யாரேனும் என்னைப் பற்றி ஏதாவது தாறுமாறாகக் கூறிப் பேசிப் பழகுவதற்குத் தடை உத்தரவு போட்டிருக்கிறார்களா ?' தெரிந்து கொள்ளாமல் மேலே செல்வதற்குப் பிடிக்கவில்லை கல்யாணத்துக்கு. சிறுவன் தானே என்று அலட்சியப்படுத்த அவன் சுபாவம் இடம் தரவில்லை.

காரைச் சாலை ஓரமாகச் செலுத்தி நிறுத்தினான். இடப் பக்கத்துக் கதவைத் திறந்து விட்டு, ''ஏறிக்கொள் விக'' என்றான்.

''வேண்டாம் மாமா! எனக்கு டப்பா கார் பிடிக்காது! நீங்க போங்க!'' என்றான் விக.

''ஆமாம்; நீ பெரிய கோமகன் பாரு! உனக்கு முன்னால் ரோல்ஸ் ராய்ஸ் கார் வந்து நிற்கும்!''

''ரோல்ஸ் ராய்ஸ் இல்லே மாமா; ப்ளிமத்! பெரிய்ய்ய கார்! கப்பலத்தனை பெரிசு! அதிலேதான் இனிமேல் போவேன்!''

கல்யாணம் துணுக்குற்றான். 'என்ன சொல்கிறான் இவன்? திடீரென்று அத்தனை ஐசுவரியம் இந்தக் குடும்பத்துக்கு எப்படிக் கிடைத்தது?'

''பலே! லேட்டஸ்ட் மாடலா? ஸ்டீரிங் ஈரா?'' விகவிடம் பேச்சை வளர்க்க அவனுக்குப் பிடித்த திசையிலேயே உரையாடலைத் தொடர்ந்தான் கல்யாணம்.

''ஆமாம் மாமா! மாக்ஸிமம் ஸ்பீட் மணிக்கு 120 மைல். ஆனால் இந்த ஊருக்குள் அத்தனை வேகமாகப் போக முடியாது. இங்கே எருமை மாடுகளுடனும் கழுதைகளுடனும் போட்டி போட்டுக் கொண்டு மனுஷாளும் நடு ரோட்டுக்குச் சொந்தம் கொண்டாடறானே. மெட்ராஸ் ட்ரங்க் ரோடிலே ஓட்டினால் நூறுமைல் வேகத்திலே பிய்ச்சுக்கும் கார்! மலை மேலே எல்லாம் 'அலாக்கா' ஏறும். உங்க டப்பாக் கார் மாதிரி இஞ்சின் ஹீட் ஆகி ரேடியேட்டர் கொதிக்காது.''

கல்யாணத்துக்குச் சந்தேகம் தட்டியது. 'ராமப்பட்டணத்திலே பெரிய கார் வைத்திருப்பவர்கள் எண்ணி இரண்டோ மூன்றோ பேர்கள்தாம். அவர்களில் ப்ளிமத் சொந்தக்காரர் ரங்கநாத முதலியார்!'

''நீலக் கலரா?''

''இல்லே. பச்சை! லைட் கிரீன்.''

'சந்தேகமே யில்லை. ரங்கநாத முதலியார் காரைத்தான் குறிப்பிடுகிறான், விக!'

''ரங்கநாதன் ஜாலி ரைட் அழைச்சுண்டு போனாரா?''

''இல்லையே. கடைத் தெருவுக்குப் போகக் கார் வேணும்னு கேட்டோம், அனுப்பிச்சார். அப்புறம் திருநீர்மலைக்குப் போகப் போகிறோம்.''

'ரங்கநாதனா கார் அனுப்பினார்! அழுக்காகி விடும் என்று தாமே அதில் ஏறத் தயங்குபவராயிற்றே! ராமப்பட்டணத்துக்குள் முக்கால் வாசி இடங்களுக்கு நடந்தே போய்விடுவாரே! அவர் இவர்களுக்குக் கார் தருவதாவது? அதுவும் திருநீர்மலைக்குப் போக?'

''அங்கே என்னடா விசேஷம்?''

''அதை மட்டும் கேட்காதீங்க மாமா! அது டாப் ஸீக்ரெட்!''

''டேய், டேய்! நெக்கு மட்டும் சொல்லுடா!''

கல்யாணம் அந்த விஷயத்தைத் தெரிந்து கொண்டே ஆக வேண்டும் என்ற நிலைக்கு வந்து விட்டான். அவனுக்கு ஏதோ புரிந்தது போலிருந்தது. ஆனால் உறுதிப்படுத்திக் கொள்ளவும் வேண்டியிருந்தது.

''ஐயோ, அம்மா என் முதுகிலே தோசை வார்த்துடுவா!''

''டேய்! நான் பிராமிஸ் பண்ணறேன். சத்தியமா ஒருத்தரிடமும் கூறமாட்டேன்.''

''ரகசியத்தைச் சொன்னால் எனக்கு என்ன தருவே?''

''சாக்லேட்!''

''பூ! எங்க வீட்டிலே நேற்றுதான் பெரிய டப்பா நிறையச் சாக்லேட் வாங்கி இருக்கா அம்மா!''

'ஆமாம், ஆமாம்! ப்ளிமத் காரிலே போகிறவனுக்கு சாக்லேட் என்ன பிரமாதம்! ரங்கநாதன் சாக்லேட் தொழிற்சாலையையே வாங்கிக் கொடுத்து விடுவாரே! அவரால் கொடுக்க முடியாத விஷயமாகச் சொல்லி இவனுக்கு ஆசை காட்ட வேண்டும்.'

''உன் பள்ளிக்கூடம் இருக்கிற தெரு முனை வரையில் இந்தக் காரை நீ ஓட்டி வரலாம்'' என்றான் கல்யாணம்.

விசுவின் முகம் உடனே பிரகாசமடைந்தது. ''கியர் போடலாமா?''

''ஓ எஸ்! ஆனா நான் சொன்னபடி கேட்டுச் சமர்த்தா நடக்கணும். இல்லாதபோனால் ஆக்ஸிடெண்ட் ஆயிடும்.''

''சேச்சே! ஐயா ஓட்டும்போது ஆக்ஸிடெண்ட் ஆகிறதாவது! எத்தனை வருஷ சர்வீஸ் எனக்கு? ஹூம்'' என்று பெரிய மனித தோரணையில் பேசியவாறு காரில் ஏறிக் கல்யாணத்துக்கு மிக அருகே இடப்புறமாக மண்டியிட்டு அமர்ந்தான் விசு. ''க்ளட்ச்சை அழுத்துங்க மாமா! காரை ஸ்டார்ட் பண்ணி கியர் போடறேன்'' என்றான், வலக்கரத்தால் ஸ்டியரிங்கைப் பற்றியபடி.

'பிள்ளையாரப்பா! ஆபத்து ஒன்றும் நேராமல் காப்பாற்று' என்று வேண்டிக்கொண்டான் கல்யாணம்.

## அத்தியாயம் 38

# படை கிளம்பியது!

இரண்டு நாட்கள் கழித்துக் கல்யாணம் சமூக சேவா சங்கக் கட்டிட வாசலில் காரை நிறுத்திவிட்டு உள்ளே போனபோது அவன் முகம் பேயறைந்த மாதிரி இல்லை; அதைவிட மோசமாக இருந்தது.

''என்ன ஆயிற்று உங்களுக்கு? இன்று ஃபைனல் டிரெஸ் ரிகர்சல் என்று தெரிந்து தாமதமாக வந்தீர்கள். எதையோ பறி கொடுத்துவிட்டது போல் நிற்கிறீர்கள். டயலாக்கை உளறிக் கொட்டுகிறீர்கள்!'' என்றாள் பவானி.

''ஆமாம். எனக்கு மனமே சரியில்லை'' என்றான் கல்யாணம். ''உங்களுக்கெல்லாம் நான் எடுத்திருக்கிற முடிவை எப்படி விவரிக்கிறது; அதை நீங்கள் எந்த விதமாக ஏற்றுக் கொள்ளப் போறீங்க என்பதை எண்ணினால் ஒரே குழப்பமா யிருக்கு.''

''போச்சுடா! ஸ்க்ரூ லூஸா? திருப்புளி கொண்டு வரட்டுமா?''

''பழுதுபார்க்கப்பட வேண்டிய மூளை ரங்கநாதனுடையது'' என்றான் கல்யாணம்.

'' புரியும்படிதான் சொல்லுங்களேன். சுற்றி வளைப்பானேன்?'' என்றாள் பவானி.

''ஆமாம் பவானி, சொல்லத்தான் வேண்டும்! சொல்ல வேண்டிய நேரம் வந்தும் விட்டது. விசுவிடம் ரகசியத்தை வெளியிடுவதில்லை என்று சத்தியம் செய்து தந்தேன். ஆனால் அதைக் காப்பாற்றப் போனால் என் மனச்சாட்சி என்னைச் சும்மா விடாது; வதைத்துவிடும். மாசிலாமணி குடும்பத்தை ரங்கநாதன் வீட்டிலே குடி வைத்ததே நான் தான் என்பதால் எனக்கு இதில் ரொம்பவும் பொறுப்பு உண்டு. நண்பர்களே கேளுங்கள்! பவானி! நீங்களும் கேளுங்கள்!

''ரங்கநாதன் அந்த ஏழைக் குடும்பத்தின் அநாதரவான நிலையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அவர்களை விலைக்கு வாங்கி விட்டார்! அந்தப் பெண் கமலாவை மணந்து கொள்ளப் போகிறார். அறுபது வயதுக் கிழவனுக்கும் பதினெட்டு வயதுக் குமரிக்கும் திருமணம்!''

''ஆ! அக்கிரமம், அநியாயம், இதை அநுமதிக்கவே கூடாது'' என்பது போல் பல குரல்கள் பரபரப்புடன் எழுந்தன. பவானி மட்டும் அமைதியாக இருந்தாள்.

''திருநீர்மலையில் இரகசியமாகத் திருமணத்தை நடத்தத் திட்டம். அதுவும் நமது நாடகம் இங்கு அரங்கேறும் அதே தினத்தில் கல்யாணத்தை வைத்துக் கொண்டிருக்கிறது அந்தக் கிழக் கோட்டான்! ஏன் தெரியுமா? எல்லாருடைய கவனமும் நாடகத்தில் இருக்கும். கல்யாணப் பார்ட்டி கிளம்பிப் போவதை யாரும் கவனிக்க மாட்டார்கள் என்ற கருத்தில்தான்! ஆனால் நாம் ஏமாந்து போகப் போவதில்லை. இந்த நீசத்தனமான காரியத்தைத் தடுத்து நிறுத்தியே தீருவோம்!''



''ஆமாம்! கிளம்பலாம்! போகலாம்! உடனே புறப்படு!'' என்று குரல்கள் எழுந்தன.

''பவானி! நீங்களும் வருகிறீர்கள் அல்லவா?'' என்றான் கல்யாணம்.

''நான் வருவதும் வராததும் என் கேள்விகளுக்கு நீங்கள் அளிக்கும் பதிலைப் பொறுத்திருக்கிறது!''

''இதில் கேட்க இன்னும் என்ன இருக்கிறது?''

''எவ்வளவோ இருக்கிறது. கமலாவை நீங்கள் காதலிக்கவில்லை என்று முன்பு நீங்கள் சொன்னீர்கள். இப்போது உங்கள் மனம் மாறிவிட்டதா என்று தெரிய வேண்டும். அப்படி யென்றால் எனக்கு ரொம்ப சந்தோஷம். ரங்கநாத முதலியாரை அவள் மணந்து கொள்ளக் கூடாதென்றால் நீங்கள் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளத் தயாரா யிருக்கிறீர்கள் என்று நான் நம்பலாமா? திருநீர்மலைக்கு எப்படிப் போகப் போகிறீர்கள்? எப்போது உங்களுக்கு இந்தச் செய்தி தெரிய வந்தது? இந்தச் சந்தேகங்களெல்லாம் நீங்கள் தீர்த்து வைக்க வேண்டும். கடைசியாக, இந்தத் திருமணத்தை எப்படித்

தடுத்து நிறுத்தப் போகிறீர்கள் என்பதையும் யோசிப்பது நல்லது!''

''பவானி! எளிதான ஒரு பிரச்னையை நீங்கள் சிக்கலுள்ளதாக்குகிறீர்கள். கமலாவை நான் முன்பும் காதலிக்கவில்லை, இப்போதும் காதலிக்கவில்லை. ஆனால் அதற்காக ஒரு கிழக்கோட்டான் ஒரு பச்சைக் கிளியைக் கொத்திக் கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டு நான் சும்மா இருக்க முடியாது. இந்தச் சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சில லட்சியங்கள் உண்டு. அந்த லட்சியங்களுக்கு மாறாகக் காரியங்கள் நடக்கும்போது கை கட்டிச் சும்மா நிற்பது கோழைத்தனம். திருநீர்மலைக்குப் போக ஒரு பஸ்ஸுக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். இன்னும் ஒரு மணி நேரத்தில் இந்தச் சங்கத்தின் வாசலுக்கு வந்துவிடும். இரவோடு இரவாகப் புறப்பட்டால் திருநீர்மலைக்கு அதிகாலையில் முகூர்த்த நேரத்துக்கு முன்பாகவே போய்ச் சேர்ந்து விடலாம். திருமணப் பந்தலில் நாம் அனைவரும் போய் நின்று, தேவையானால் சத்தியாக்கிரகமே செய்து கமலாவைக் காப்பாற்றலாம். எனக்கு எப்போது இந்தச் செய்தி தெரியவந்தது என்று கேட்டீர்கள். இரண்டு தினங்களுக்கு முன்பாகத்



நான் தெரிந்து கொண்டேன். இந்தக் கல்யாணத்தை எப்படித் தடுப்பது என்று யோசித்து ஒரு முடிவுக்கு வந்த பின்னர் உங்கள் எல்லோரிடமும் பேச நினைத்தேன். இடையில் பஸ்ஸுக்கும் ஏற்பாடு பண்ணினேன். ரங்கநாத முதலியாரும் மாசிலாமணி குடும்பமும் மெய்யாலுமே கிளம்பிச் செல்கின்றனரா என்று கண்காணிக்கவும் செய்தேன். இன்று பிற்பகல் அவர்கள் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். விசுவுக்கு நான் கொடுத்த வாக்குறுதியும் என்னை உடனே பேச விடாமல் தடுத்தது. போதுமா பவானி? திருப்திதானா? இப்போதாவது நாம் புறப்படலாமா?''

பவானி சிரித்தாள். ''கல்யாணம்! அரும் பெரும் சாதனைகளைப் புரிந்த வீரனைப் போல் பேசுகிறீர்களே! உம்? உங்களைப் பற்றி நான் எவ்வளவோ உயர்வாக எண்ணி வந்தேன். இன்று எனக்குப் பெரிய ஏமாற்றம் அளித்து விட்டீர்கள்!''

''எந்த விதத்தில்? நான் என்ன தவறு செய்தேன்? தயவுசெய்து விளக்கினால் நல்லது'' என்று சற்று விரைப்புடன் வினவினான் கல்யாணம்.

''சத்தியாக்கிரகம் என்ற சொல்லை உபயோகித்தீர்கள். ஆனால் நீங்கள் செய்ய எண்ணியுள்ள காரியம் துராக்கிரகம்தான். இரண்டு நாட்களுக்கு முன்பே உங்களுக்கு இந்த விவரம் தெரியுமென்றால் நீங்கள் உடனே ரங்கநாத முதலியாரை அணுகி நயமாகப் பேசி அவர் மனத்தை மாற்ற முயன்றிருக்கலாம். ஆனால் நீங்கள் அப்படிச் செய்யவில்லை. திருமண தினத்தன்று கல்யாணப் பந்தலில் கலாட்டா செய்து ஒரு பரபரப்பை ஏற்படுத்த ஆசைப்படுகிறீர்கள். ரங்கநாத முதலியாரை அப்போதுதான் நன்றாக அவமானப்படுத்தியதாகும், வெட்கித் தலை குனிய வைத்ததாகும் என்று திட்டம் போட்டிருக்கிறீர்கள்.''

''ரங்கநாத முதலியாரிடம் நான் நயமாகப் பேசியிருந்தால் அவர் உடனே என் சொற்படி கேட்டு நடந்து கொண்டிருப்பாராக்கும்? பவானி! ரங்கநாத முதலியாரை உங்களைவிட நான் நன்றாக அறிவேன். அவர் உடனே போலீஸ் பாதுகாப்பை நாடியிருப்பார். நம்மால் ஒன்றுமே செய்ய முடியாமல் போயிருக்கும்.''

''அப்படி நீங்கள் கருதுவதாயிருந்தால் சத்தியத்தின் வெற்றியில், தார்மிக வற்புறுத்தலில் உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்று அர்த்தம்'' என்றாள் பவானி. ''கமலா, அவள் பெற்றோர், ரங்கநாதன், உங்கள் தகப்பனார், அவசியமானால் ஊரிலுள்ள மற்றப் பெரியவர்கள் எல்லாரிடமுமே நாம் பேசியிருக்கலாம். இப்படி ஒரு திருமணம் நடக்க அனுமதிப்பது தவறு என்று ஆரோக்கியமான ஓர் எதிர்ப்புணர்ச்சியை வளர்த்திருக்கலாம்.''

''போகாத ஊருக்கு வழி சொல்லுகிறீர்கள். இரண்டு நாட்களில் நடக்கக் கூடிய காரியமா, வெகுஜன அபிப்பிராயத்தை வளர்ப்பது என்பது?''

''நாளைக்கு நாடகம் என்று அறிவித்திருக்கிறீர்களே; டிக்கட் விற்றிருக்கிறீர்களே; காசு கொடுத்தவர்களுக்கு எவ்வளவு ஏமாற்றமாக இருக்கும்?''

''நாடகத்தை ஒரு வாரம் ஒத்திப் போடுவதில் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடாது. இப்போது வாங்கியிருக்கிற டிக்கெட்டை வைத்துக் கொண்டே எல்லோரும் அடுத்த ஞாயிற்றுக் கிழமை வரலாம் என்று அறிவித்துவிடலாம். ஆனால் கல்யாணத்தை நாளைக்கு நிறுத்தாமல் போனால் போனதுதான். அந்த அநீதியை அப்புறம் நேராக்கவே முடியாது.''

''அநீதி என்று எப்படித் தீர்மானித்தீர்கள்? கமலாவே இதற்கு மனப்பூர்வமாகச் சம்மதித்திருந்தால்?''

''ஏது, நீங்களே பக்கத்திலிருந்து நிச்சயதார்த்தம் நடத்தி வைத்தது மாதிரிப் பேசுகிறீர்களே?''

''இல்லை. ஆனால் ஒரு பெண்ணின் மனத்தை இன்னொரு பெண்ணால் புரிந்து கொள்ள முடியும். அதிலும் கமலாவின் மனம் எப்படிச் செயல்படும் என்பதை நான் நன்றாக உணர முடியும்.''

''அப்படியே அவள் சம்மதித்திருந்தாலும் அது பெற்றோரின் வற்புறுத்தலால் அல்லது ஒரு வீம்புக்காகத்தான் இருக்கும். பின்னால் அதற்காக அவள் ரொம்ப வருத்தப்படுவாள்.''

''மிஸ்டர் கல்யாணம்! முடிவாகச் சொல்கிறேன். நீங்கள் செய்யப் போகும் காரியம் அநாகரிகமானது; எனக்குச் சம்மதமில்லை. சட்ட ரீதியிலோ அல்லது தார்மீக ரீதியிலோகூட உங்களுக்கு இதைச் செய்ய அருகதை இல்லை. நான் போய் வருகிறேன். நாடக ஒத்திகையைத் தொடர்வதானால் என் வீட்டுக்குச் சொல்லி அனுப்புங்கள்.''

பவானி விடுவிடுவென்று நடந்து சங்கக் கட்டடத்தின் வாசலுக்கு வந்து காரில் ஏறினாள்.

அவள் சென்ற பிறகு கல்யாணம் தன் நண்பர்களைப் பார்த்து, ''என்ன சொல்

## புதுக் கவிதைப் பாவலருக்கு...

இவ்வாண்டு கல்கி தீபாவளி மலரில் இடம் பெறத் தகுதி யுடையனவாகப் புதுக் கவிதைகளை வரவேற்கிறோம். செப்டம்பர் 4ம் தேதிக்குள் எங்களுக்கு வந்து சேரும் கவிதைகளைப் பரிசீலித்துச் சிறந்த பத்துப் பன்னிரண்டு கவிதைகளைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரிக்க எண்ணியுள்ளோம். உறை மீது ''புதுக் கவிதை'' என்று குறிப்பிடவும்.

— ஆசிரியர், கல்கி, சென்னை-600 031.

பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

உங்கள்
மனம் கவர்ந்தவள்
இன்னொரு
அன்பளிப்பு
கேட்கப் போகிறாள்...

அன்பளிப்பாக நீங்கள் அளித்த பல பொருட்கள் அவள் வசம் இருக்கக் கூடும். எனவே மீண்டும் அவள் கேட்கும்போது மறுக்காதீர்கள். இந்தியன் பாங்க் கேஷ் சர்ட்டிபிகேட் ஒன்றை இப்போது வாங்கினாலும், பின்னர் பல அரிய பொருட்களை வாங்க அது உதவும் என்று விளக்குங்கள். ஏனெனில் இந்தியன் பாங்க் கேஷ் சர்ட்டிபிகேட்டின் மதிப்பு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகும்.

நீங்கள் விரும்பும் காலத்துக்கும் தொகைக்கும் ஏற்ற கேஷ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம். எடுத்துக்காட்டாக, 15 வருடங்கள் கழித்து ரூ. 10,000 தரும் கேஷ் சர்ட்டிபிகேட்டை ரூ. 2,233 மட்டும் கொடுத்து வாங்கலாம். அல்லது 6 வருடங்கள் கழித்து ரூ. 1,000 தரும் கேஷ் சர்ட்டிபிகேட்டை ரூ. 450.10 மட்டும் கொடுத்து வாங்கலாம். கேஷ் சர்ட்டிபிகேட் பற்றி மேலும் விவரம் அறிய நீங்கள் அருகாமையிலுள்ள எமது கிளைக்கு விஜயம் செய்யுங்கள்.

எந்த அன்பளிப்பையும் விட
இந்தியன் பாங்க்
கேஷ் சர்ட்டிபிகேட்
அதிக மதிப்பு வாய்ந்தது
என்று அவளுக்கு
எடுத்துச் சொல்லுங்கள்.

இந்தியன் பாங்க்

## இந்தியன் பாங்க் கேஷ் சர்ட்டிபிகேட் —
## மதிப்பு உயர்ந்து கொண்டே போகும் ஓர் அன்பளிப்பு

FDS IB 2406 TAM

கிறீர்கள்?'' என்று கேட்டான். அவன் குரலில் இப்போது முன்பிருந்த வேகம், உறுதி ஏதுமில்லை. பவானிக்கு இந்தக் காரியம் பிடிக்கவில்லை, கோபித்துக் கொண்டு போய் விட்டாள் என்றதும் அவனுக்கு உற்சாகம் குறைந்து விட்டது. அவள் பிரமாதமாகத் தன் ஏற்பாடுகளைப் பாராட்டுவாள் என்று எதிர்பார்த்து வந்ததற்கும் அவள் உண்மையில் நடந்து கொண்ட விதத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்! ''நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். நான் யாரையும் வற்புறுத்தத் தயாராயில்லை. நாம்பாட்டுக்கு இந்தத் திருமணத்தைப் பற்றிய விவரம் ஒன்றுமே தெரியாதது போல இருந்து விடலாம். நாடகத்தைத் தொடர்ந்து நடத்தலாம்'' என்றான்.

ஓரிரு விநாடிகள் மௌனம் நிலவியது. அதையடுத்து ஒரு தீவிரவாதி, கணீரென்று பேசினான்: ''ஏன் தயங்குகிறீர்கள்? உங்களையெல்லாம் பார்த்துத்தான் மகாகவி பாரதி, 'வாய்ச் சொல்லில் வீரரடி' என்று பாடினான். 'நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறனுமின்றி வஞ்சனை சொல்வாரடி' என்றான். கமலாவுக்கு இப்படி நீங்கள் வஞ்சனை செய்யலாமா? முன் வைத்த காலைப் பின் வைக்கலாமா? அந்தப் பவானி, தானே கமலாவின் கழுத்தில் கல்லைக் கட்டிக் கடலிலும் தள்ளுவாள் போல் இருக்கிறது. அவள் பேச்சைக் கேட்டு மயங்கிவிடாதீர்கள். ஒரு பெரிய அக்கிரமம் நமக்குத் தெரிந்து நடக்கும்போது சும்மா இருப்பது பேடித்தனம்'' என்று ஆவேசத்துடன் சொன்னான்.

''ஆமாம், புறப்படுங்கள், போகலாம்'' என்றான் இன்னொருவன். உடனே அதைத் தொடர்ந்து, ''பஸ் வந்து விட்டதா? கிளம்பலாமா? முகூர்த்தம் எத்தனை மணிக்கு? நாடகம் ஒத்திப் போடப்பட்டிருப்பதாகத் தண்டோராப் போடச் சொல்லுவோமா? அவரவர் வீட்டுக்குப் போய் ஒரு 'ஸெட்' துணி மணிகளுடன் அரை மணி நேரத்தில் இங்கு திரும்பி வந்து விடுவோம்'' என்றெல்லாம் பலவாறாகப் பேசி முடிவுகளுக்கு வந்தார்கள்.

கல்யாணம் இனி தான் நினைத்தாலும் அவர்களைக் கட்டுப்படுத்த முடியாது என உணர்ந்தான். தான் அணையை உடைத்து விட்டது போலவும் அந்த வெள்ளம் தன்னையே அடித்துச் செல்வது போலவும் அவனுக்குத் தோன்றியது! (தொடரும்)

# வட்ட மேஜை

சிம்லாவிலிருந்து ஜில்லென்று ஒரு செய்தி கிடைத்துள்ளது. அதாவது ஹிமாசலப் பிரதேசம் சம்ஸ்கிருத அபிவிருத்திக்காக ஐந்து மகா வித்யாலயங்களைத் தொடங்கப் போகிறது. சிம்லா, சோலன், சுந்தர் நகர், கயார்டு, நஹன் ஆகியவை அதிர்ஷ்டம் பெற்ற ஐந்து நகரங்கள்.

மாநிலக் கலை, கல்வி, கலாசார அகாதமிகளில் சம்ஸ்கிருத அறிஞர்கள் அங்கம் வகிப்பர். எல்லாப் பள்ளிகளிலும் சம்ஸ்கிருதம் கற்பிக்கப்படும். மாநில சம்ஸ்கிருத வாசகசாலை வளர்ச்சிக்குப் பத்தாயிரம் ரூபாய் அனுமதித்துள்ளது. இதுபோல் ஒரு பத்தாயிரம் ரூபாய் மத்திய அரசு மாநில அரசுக்கு உதவியுள்ளது. கல்லூரிகளிலும் மாணவர்களுக்கு 'எலெக்டிவ்' மற்றும் இஷ்ட பாடமாக சம்ஸ்கிருதம் கற்பிக்கப்படுகிறதாம்.

இரண்டாவதாக வெளியாகியுள்ள செய்தி முதல் செய்தியைத் தூக்கி அடிப்பதாக இருக்கிறது. குருக்ஷேத்திரத்தில் வேத சர்வகலாசாலை தொடங்கப்படவுள்ளது, விரைவில். International Society for Krishna consciousness இத்திட்டத்தை நிறைவேற்ற முன்வந்துள்ளது. ஸ்ரீ ஏ.ஸி.பக்தி வேதாந்த ஸ்வாமி ப்ரபுபாதர் இதன் தலைவர். இவரது அமெரிக்கச் சீடர் ஆல்பிரெட் போர்டு பெருஞ் செல்வரான ஹென்றி போர்டின் உறவினர். ஆல்பிரெட் போர்டு தம் பெயரை கம்பரிஷி தாஸ் என மாற்றி அமைத்துக் கொண்டுள்ளார். இந்த வேத சர்வகலாசாலை அமைப்புக்கான ரூபாய் இரண்டு கோடி செலவில் பெரும் பகுதியை இந்த அமெரிக்க கிருஷ்ண பக்தர் ஏற்கிறாராம். நற்பணிகளால் நாடு நலன் பெறும்.

சென்னை
23-7-76 வி.ச. வாசுதேவன்

ஆஸ்துமா பற்றிய கட்டுரை பார்த்தேன். பொதுவாகத் தற்போது ஆஸ்துமாவுக்குக் கிடைக்கும் மருந்துகள் பல தீவிர ஆஸ்துமா நோயாளிகளுக்குப் பயன்படுவதில்லை என்பது உண்மையே. ஆனால் ஒரு புதிய மருந்து இப்போது வந்திருக்கிறது. டை ஸோடியம் க்ரோமோக்ளைகேட் என்ற இந்த மருந்து தீவிர ஆஸ்துமா நோயாளிகளுக்கு மற்ற மருந்துகளால் கிடைக்காத நற்பயனைத் தருகிறது. ஆனால் இந்தப் புதிய மருந்தின் விலை ஏகமாக இருக்கிறது. மத்திய தர வகுப்பினர் வாங்க முடியாத நிலை.

இந்த மருந்து மட்டுமல்ல. வேறு பல நல்ல மருந்துகளும் இதே போல் எட்டாத விலையில் உள்ளன. அரசு ஏதேனும் நடவடிக்கை எடுக்கக் கூடாதா?

கோவை
31-7-76 டாக்டர்ஜி.என்.லக்ஷ்மிநாராயணன்

''ஆபத்து அற்ற ஆஸ்துமா'' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை குறித்து ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். குறிப்பிட்ட ஒரு மருத்துவ முறையில் ஆஸ்துமாவுக்கு நிரந்தரமாக மருந்துகள் இல்லை என்று சொல்லலாமே ஒழிய வேறு எந்த மருத்துவத்திலும் ஆஸ்துமாவைக் குணப்படுத்த மருந்துகளே இல்லை என்று சொல்ல முடியாது.

ஹோமியோபதி மருத்துவத்தால் ஆஸ்துமாவை நிரந்தரமாகக் குணப்படுத்த முடியும்.

எட்டையாபுரம்
2-8-76 பி. மதனகோபால்


நீடித்த
அழகுக்குத் தேவை
தூய்மையான மேனி.

# லாக்டோ-காலமைன் ஒன்றுதான் உங்கள் மேனியை அனைத்திலும் அருமையாகப் பாதுகாக்கும்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோ-காலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்பு-லாக்டோ காலமைன்–அஸ்ட்ரின்ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ∴பவுண்டேஷன் க்ரீம் மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ருக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறுகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானு என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ருக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர், அதோடு, க்ருக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டுஃபார்-இண்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-45-P/76/Tam.

# பாடுவோம் பாப் மியூசிக்!

7

கதை:
**தமயந்தி/ சாருகேசி**

சித்திரம்: ராஜு
















அவர் வீட்டு நாய்க்குட்டி, பூனைக்குட்டி, எருமை மாடு, இத்யாதி ... இத்யாதி ...
உனக்குத் திண்டாடமாயிருக்கிறதாக்கும்? ஹிந்துஸ்தானி பாட்டு நம்ம சபா விலேயே இதுதான் முதல் தடவை வைக்கிறோம்.


பாவம் அந்த முகவீணைக்காரர். அவரும் அன்றைக்குக் கெஞ்சினார்.
உன் அம்மாவைக் கூப்பிடு, சொல்கிறேன்.
எதற்குக் கூப்பிட்டீர்கள்? என்ன தலை போகிற காரியம்?


எங்க கந்தர்வ கான சபா ஆண்டு விழாவிலே ஹிந்துஸ்தானி பாட்டு போடறோம். முதல் தடவையா. அதைத் சொல்லத் தான் கூப்பிட்டேன்.


அட ராமா! நீங்கள் ஏதோ புடவைக் கடைக்குக் கூட்டிக் கொண்டு போகத் தான் கூப்பிட்ட மாதிரியல்லவா நினைத்துக் கொண்டு வந்தேன்! நீங்கள் ஹிந்துஸ்தானி கச்சேரி வைத்தால் என்ன, சதிர்க் கச்சேரி வைத்தால் எனக்கென்ன?


உனக்கென்னம்மா, உன் காதுக்குள்ளேயா வந்து பாடப் போகிறது? இல்லே உன் தலையிலா டான்ஸ் ஆடப் போகிறது?


எங்க சபா சரித்திரத்திலே இது ஒரு அபார சாதனை. ஹா ஹா!
வெகு சுலபமாக மிஸ்டர் லிங்கத்தையும் பாலாஜியையும் வசியப் படுத்த இதைவிட வேறு வழியே கிடையாது! அம்மாவுக்கும் பெண்ணுக்கும் என்ன தெரியும்?...



புது தில்லி டெலிகம்யூனிகேஷன்ஸ் ரிஸர்ச் சென்டரில் அஸிஸ்டெண்ட் டைரக்டராகப் பணியாற்றும் பொன்னூர் ஸ்ரீ K. சேதுராமன் அவர்களின் புதல்வி சௌ. ராஜேஸ்வரிக்கும், தில்லி டால்மியா ஸிமெண்ட்ஸ் ஸ்ரீ V. N. ஸ்வாமி அவர்களின் மருமானும், மாப்படுகை ஸ்ரீ T. S. கல்யாணசுந்தரமய்யர் அவர்களின் புதல்வருமான சிரஞ்சீவி K. சந்தானத்துக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!




குழந்தைக்கு இரண்டு நாட்களாக உடம்பு சரியில்லை என்று சிவராஜ் என்னை டெலிபோனில் அழைத்தவுடன் அவரது வீட்டுக்கு விரைந்தேன். மூன்று வயதுச் சிறுவன். 103 டிகிரி காய்ச்சல். சளி, வாய் ஓயாது இருமல். கண்கள் சிவந்து நீர் வடிந்துகொண்டிருந்தது.

''காய்ச்சல் எத்தனை நாட்களாக அடிக்கிறது?'' என்று சிவராஜைக் கேட்டேன்.

''இரண்டு நாட்கள் மூக்கிலிருந்து சளி நீராக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. சாதாரண ஜலதோஷம்தானே என்று எண்ணிச் சும்மா இருந்து விட்டோம். இருமல் வேறு சேர்ந்து கொள்ளவே குழந்தை மிகவும் சிரமப்பட்டான். இன்று காலை முதல் கடுமையான காய்ச்சலும் ஆரம்பிக்கவே உங்களை அழைத்தேன்'' என்றார் சிவராஜ்.

குழந்தையின் சருமத்தை உற்றுக் கவனித்தேன். சில இடங்களில் சிவப்புப் புள்ளிகள் காணப்பட்டன. காய்ச்சலுக்கும் சளிக்கும் மருந்து எழுதிக் கொடுத்து விட்டு மறுநாள் வருவதாகச் சொல்லி விடைபெற்றேன்.

மறுநாள் மாலை நான் சிவராஜின் வீட்டுக்குள் நுழைந்ததுமே, ''குழந்தைக்குத் தட்டம்மை கண்டிருக்கிறது, டாக்டர். இதற்கு மருந்து ஏதும் கொடுக்கக் கூடாது என்று சொல்லுவார்களே'' என்றார் சிவராஜின் மனைவி.

''எதற்கும் குழந்தையைப் பார்க்கலாம்'' என்று சொல்லியவாறு சிறுவன் படுத்திருந்த அறைக்குச் சென்றேன். உடல் முழுதும் தட்டையாகச் சிவப்புப் புள்ளிகள் காணப்பட்டன. சிறுவனின் படுக்கையில் நாலாபுறமும் வேப்பிலை பரப்பி யிருந்தார்கள்.

**''வேப்பிலை இந்நோயினைத் தீர்க்க எந்த அளவு பயன்படும்?''**

''அம்மை கண்ட நோயாளி படுத்திருக்கும் அறையில் வேப்பிலை இருப்பதும், கற்பூரம் கொளுத்துவதும் நல்லதுதான். அந்த அறையைச் சூழ்ந்துள்ள காற்றில் 'வைரஸ்' கிருமிகள் பரவியிருக்கும். காற்றைச் சுத்தம் செய்ய இவை ஓரளவு பயன்படும். எனினும், நோயாளி உடலில் ஓடும் இரத்தத்தில் பரவியுள்ள கிருமிகளை வேப்பிலை என்ன செய்யும்? அதற்கு மருந்து கொடுக்கத்தான்வேண்டும்.''

**''இதற்கு என்ன மருந்து டாக்டர்?''**

''காய்ச்சல், நெஞ்சில் கட்டியுள்ள சளி, இருமல் இவற்றைப் போக்க முறையே ஆன்டி பைரெடிக்ஸ், ஆன்டி பயாடிக்ஸ், இருமல் சிரப் இவை கொடுக்க வேண்டும். கண்ணுக்கும் ஆயின்ட்மெண்ட் போடுவது அவசியம்.''

**''மருந்து ஏதும் கொடுக்காமல் தானாகவே குணமடையும்படி விட்டுவிட்டால்?''**

''சிலருக்கு நிமோனியா கண்டு, அதன் விளைவாக உயிருக்கு ஆபத்து விளையக்கூடும். மருந்து கொடுத்த இரண்டு மூன்று நாட்களில் சிவப்பாக இருந்த தட்டம்மைப் புள்ளிகள் முதலில் கறுப்பாக மாறி அப்புறம் மறைந்து விடும். அடுத்த நான்கு நாட்களில் பூரண குணம் அடைந்துவிடலாம்.''

**''இந்நோய் கண்டு எவ்வளவு நாட்கள் வரை இது மற்றவர்களுக்குப் பரவும் வாய்ப்பு உண்டு?''**

''இரண்டு முதல் மூன்று வாரங்கள்வரை எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. நோயாளியை மருத்துவ மனையில் சேர்க்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. தனி அறையில் இருந்தால் போதும். இதில் வேறு இருவகை உண்டு. ஒன்று மணல்வாரி எனப்படும். வேர்க்குரு மாதிரி இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் மறைந்து விடும். இன்னொரு வகை அம்மை அபூர்வமாகத்தான் சிலருக்கு வரும். உடலெல்லாம் இரத்தம் மாதிரி சிவந்து விடும். மூக்கிலிருந்தும், சிறுநீர், மலம் இவற்றுடனும் இரத்தம் வடிந்து வெளியேறும். இது கொடிய வகை.''

**''சிறுவர்கள், பெரியவர்கள் அனைவரையும் இந்நோய் தாக்குமல்லவா?''**

''ஆம். சூலுற்ற பெண்களுக்குத் தட்டம்மை கண்டால் விசேஷ கவனம் தேவை. பிறக்கவிருக்கும் குழந்தையின் மூளை, செவி ஆகியவை பாதிக்கப்படும் வாய்ப்பு உண்டு. தாய்க்கு காமா குளோப்யூலின் தடுப்பு ஊசி போடுவது அவசியம். மேலை நாடுகளில் இதற்கு ஒரு 'வாக்ஸின்' கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் அதே வாக்ஸின் மாறுபட்ட நம் நாட்டுப் பருவ நிலை காரணமாக இங்கு பயன்படாது. நம் நாட்டில் 'வாக்ஸின்' ஏதும் கண்டு பிடிக்கப்படவில்லை. எனவே, நோய் கண்டவர்கள் சிகிச்சை செய்துகொள்ள வேண்டியது அவசியம். குறிப்பாகக் குழந்தைகளுக்கு மருத்துவச் சிகிச்சை இன்றியமையாதது.''

**டாக்டர் எஸ். வி. டி. சாரி கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**



# சூதாட்டத்தை ஒழித்தோர்!

நியூயார்க் பருத்திச் சூதாட்டம் சென்னையிலும் சுற்றுப்புறத்திலும் 1950–55 வரை தலைவிரித்தாடியது. இதை ஒழிக்க அரசு எடுத்த நடவடிக்கைகள் பயனற்றுப் போயின. எப்படி இதை நடத்தினார்கள்? அரசு ஊழியர்களை, முக்கியமாகக் காவல் துறையில் பணி புரிந்த சில அதிகாரிகளையும், காவலர்களையும் தம் கையில் போட்டுக் கொண்டனர். சில காவல் நிலையங்களைச் சுற்றி தூரம்கூடத் தரகர்கள் 'பெட்டிங்' எடுப்பார்கள். நேர்மையான அதிகாரிகளை உடனே மாற்றிவிடச் சூதாட்டக்காரர்கள் ஏற்பாடு செய்வார்கள்.

சென்னையில் மூன்று பெரும் புள்ளிகள் இதனை நடத்தி வந்தார்கள். சென்னையையும், சுற்றுப்புறங்களையும் மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொண்டார்கள். ஒவ்வொருவர் கீழும் நூற்றுக்கணக்கான ஆட்கள் வேலை செய்து வந்தார்கள். காவலருக்கு யாராவது துப்புக் கொடுத்தால் அவர்கள் இருக்கும் இடம் இல்லாமல் போய்விடுவார்கள். திருவல்லிக்கேணியில் அவர்களுக்குத் தொல்லை கொடுத்த ஆள் ஒருவர் பட்டப் பகலில் நடுத் தெருவில் அடித்துக் கொலை செய்யப்பட்டார். சென்னையில் திருவல்லிக்கேணிவாசிகளே இந்தச் சூதாட்டத்தினால் மிகவும் பாதிக்கப்பட்டவர்கள்.

நிலைமை மிக மோசமாகிக் கட்டுமீறிப் போய்க் கொண்டிருந்தது. அரசு துரிதமாகச் செயல்பட்டது. காவல் துறையில் டி. ஐ. ஜி. பதவி வகித்த திரு அருள் அவர்கள் தலைமையில் 'குழு' ஒன்று அமைக்கப்பட்டது.

மூன்று புள்ளிகளையும் ஒழிக்க மூன்று இன்ஸ்பெக்டர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திட்டங்கள் பல போட்டோம். எப்படியோ எங்கள் திட்டங்கள் புள்ளிகளுக்குத் தெரிந்து விடும். நாங்கள் போடும் ஒவ்வொரு திட்டமும் உடனடியாகத் தெரிந்ததால் அவர்கள் இன்னும் தைரியமாக வேலை செய்ய ஆரம்பித்தார்கள். வருநாளும் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு நபருக்கும் லட்சத்துக்கு மேல் கிடைத்தது. இரவில் வரவு செலவுகளைப் போட்டு ''பேமண்ட் ஸ்லிப்'' தயார் செய்யும் வேலையை ஒவ்வொரு நாளிலும் ஒவ்வோர் இடத்துக்கு மாற்றி வந்தார்கள்.

முதலில் திருவல்லிக்கேணி நபரையே பிடித்து அமுத்த வேண்டும் என்று ஏற்பாடு செய்தோம். என்னையும், என்னுடன் ஒத்துழைத்தவர்களையும் சூதாட்டப் புள்ளிகள் கண்காணிக்க ஆரம்பித்தார்கள். எங்களுக்கு வேண்டிய உதவியுடன் தைரியத்தையும், உற்சாகத்தையும் அளித்ததோடு திரு அருள் அவர்கள் தாமே முன்னணியிலிருந்து அவ்வப்போது ஆவன செய்து வந்தார்.

திட்டத்தின்படி திருவல்லிக்கேணி சூதாட்டப் புள்ளியிடம் வேலை பார்த்த ஏஜண்டை எங்களுக்கு உதவுமாறு ஏற்பாடுகள் செய்தோம். அவர் முதலில் மறுத்தாலும், அதிகாரிகள் கொடுத்த தைரியத்தால் உதவி செய்ய முன்வந்தார். சூதாட்டம் நடப்பது எப்படி? பணம் எப்படி வாங்கப்பட்டு, எந்த இடங்களுக்குப் போகிறது. யார் அதை வாங்கிப் பட்டுவாடா செய்வது. எங்கே ''பேமெண்ட் ஸ்லிப்'' தயாராகிறது என்பதை யெல்லாம் அவரைக் கவனித்து வரச் செய்தோம். திட்டம் திருப்திகரமாக நிறைவேறியது.

நாளொன்று குறிக்கப்பட்டது. அன்று உளவு சொல்ல ஏற்பாடு செய்திருந்த நபருக்குத் திரைப் படப் பிடிப்பு நிலையம் ஒன்றில் ஒப்பனை செய்து போலீஸ் காவலராக மாற்றி எங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டு இரவு பெரும் படையுடன் சென்று திருவல்லிக்கேணி வட்டாரத்தைச் சுற்றிக் கொண்டு சூதாட்டக்காரர் தங்கி ஒளிந்து வேலை செய்து கொண்டிருந்த வீட்டை வளைத்து எல்லோரையும் கைது செய்தோம். 'பேமெண்ட் ஸ்லிப்', மற்றுமுள்ள தஸ்தாவேஜுகள், ஏராளமான பணம் முதலியவற்றைக் கைப்பற்றினோம். மறுநாள் காலையில் சென்னையில் ஒரு பகுதியில் இந்தச் சூதாட்டம் அடியோடு ஒழிந்தது. இதைத் தொடர்ந்து மற்ற இரு புள்ளிகளும் ஏராளமான பணத்துடனும், ஏஜெண்டுகளுடனும் சிக்கிக் கொண்டனர். வழக்கு மன்றத்தில் உரிய தண்டனை பெற்றனர். இதன் பின் 'காட்டன் பெட்டிங்' சென்னையில் தலைதூக்கவில்லை. இந்த வெற்றிக்குப் பலரது ஒத்துழைப்பு இருந்தது என்றாலும் தலைமை தாங்கித் திட்டம் தீட்டித் தோன்றாத் துணையாயிருந்து ஊக்குவித்த பெருமை திரு அருள் அவர்களையே சாரும்.

**ரா. துரைராஜ்**

# சேரமான் காதலி

**கண்ணதாசன்**

## அத்தியாயம் 23

## அரபுச் சிலை வந்தது!

**வ**ஞ்சியின் மகுடத்தைத் திருத்தலங்களுக்கு அனுப்புவதற்கான ஏற்பாட்டை நாராயண நம்பூதிரி செய்து முடித்தார்.

அந்த மகுடத்தைப் போலவே வேணாட்டுக்கு ஒரு மணி மகுடம் தயார் செய்ய அவரே பொன் தட்டிக் கொடுத்து வஞ்சியின் அரண்மனையிலேயே அதற்கான வேலைகள் நடந்து கொண்டிருந்தன.

அரபு நாட்டின் தங்கமும், இஸ்ரவேல் மணிகளும் பாண்டிய நாட்டு முத்துக்களும் புதிய மகுடத்துக்காக வரவழைக்கப் பட்டன.

குலசேகர ஆழ்வார் முடிசூட்டிக் கொண்டபோதும், மார்த்தாண்ட வர்மன் முடிசூட்டிக் கொண்டபோதும் மகுடத்துக்கு என்னென்ன சடங்குகள் செய்யப்பட்டனவோ அதே சடங்குகள் இப்போதும் செய்யப்பட்டன.

பாண்டிய நாட்டிலிருந்து பட்டு நூல் நெசவு செய்வோர் வரவழைக்கப்பட்டு வண்ண வண்ணப் பட்டாடைகள் ஒரு புறம் தயாராகிக் கொண்டிருந்தன.

ஆவணி மாதம் கிருஷ்ண பக்ஷத்தில் வஞ்சியின் முடிசூட்டு விழாவை நடத்துவதென்றும், அடுத்த ஏழாவது நாள் வேணாட்டு முடிசூட்டு விழா நடத்துவதென்றும் நாள் பார்த்து முடிவு செய்யப்பட்டது.

சோழ நாட்டிலிருந்து விக்கிரம சோழனும், சோழமாதேவியும் பத்துத் தினங்களுக்கு முன்பாகவே வந்துவிடுவதாகச் செய்தி அனுப்பி யிருந்தார்கள்.

திருக்கண்ணபுரத்தில் மகுடத்தை வரவேற்றுப் பூஜைகள் செய்த பிற்பாடு அதைத் தொடர்ந்தே அவர்களும் வந்து விடுவதாக ஏற்பாடு.

திருவிதாங்கோட்டைத் தலைநகராகக் கொண்ட வேணாட்டுக்கென்று வஞ்சியின் சேனைகளில் ஒரு பகுதி ஒதுக்கப் பட்டது. அங்கதன் அதன் தளபதியாக நியமிக்கப்பட்டான்.

அதோடு புதிய பரிவாரங்களைத் தேர்வு செய்யும் வேலையும் அவன் வசம் ஒப்புவிக்கப்பட்டது.

முடிசூட்டு விழாவுக்குப் பின் தாவளி சகோதரிகள் தங்குவதற்காகத் தனி அரண்மனை ஒன்றும் கட்டப்பட்டது.

வஞ்சி நகரத்து எல்லையில் தென்னஞ் சோலைகளுக்கு நடுவே அமைந்த ஓய்வு மாளிகையை முடிசூட்டு விழா முடிந்ததும் பூனியாளுவுக்குக் கொடுத்துவிட ரவிவர்மன் முடிவு செய்தான்.

எந்த வகையான மனக் கசப்பும், பகை உணர்வும் இல்லாமல், எல்லா வேலைகளிலும் எல்லோரும் பங்கு பெற்றனர்.

கொடுங்கோளூர் பகவதி அம்மன் கோவில் புதுப்பிக்கப்பட்டது.

முடிசூட்டு விழாவுக்கான நாள் நெருங்கிற்று.

அதே நேரத்தில் அரபிக் கடலில் அந்தப் பாய்மரக் கப்பல் மிதந்து கொண்டிருந்தது.

ரோம வம்சத்தின் புரூரவச் சக்கரவர்த்தியின் வாரிசுகள் என்று தங்களை அழைத்துக் கொள்ளும் வஞ்சி வேந்தர்களின் அலங்காரச் சிம்மாசனம் வாரிசு பாத்தியதையற்ற ஒருவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தது.

எதில் மிரு மாந்தரின் இலக்கியச் சோலையில் கவின் மிரு காவியங்கள் உருவாகத் தொடங்கின.

சிறைச்சாலைக் கைதிகளில் பலர் முடிசூட்டு விழாவை முன்னிட்டுத் திறந்து விடப்பட்டனர்.



நாளை வஞ்சியின் முடிசூட்டு விழா!

அதே நேரத்தில் அரபிக் கடலில் அந்தப் பாய்மரக் கப்பல் மிதந்து கொண்டிருந்தது.

பொழுது விடிந்தது!

இன்று முடிசூட்டு விழா!

கோட்டை மைதானத்தில் கூட்டம் பெருகிற்று.

மார்த்தாண்ட வர்மன், மணிமுடி சூடியபோது கண்ட அதே காட்சி!

ஆனால் ஒரு மாற்றம்.

இப்போது நாராயண நம்பூதிரி சர்வ சக்தி உள்ளவராக விளங்கினார்.

அவர் சொன்னபடியே காரியங்கள் அனைத்தும் நடந்தன.

பூஜியானாவும் விழாவுக்கு வந்திருந்தாள்.

வழக்கம்போலவே அவள் உரிமையற்ற ஒருத்தியாகத்தான் உட்கார்ந்து பார்த்திருந்தாள்.

பத்மாவதியை விட அவள் அழகி என்றாலும் மகாராணி பத்மாவதிதானே!

துந்துபி முழங்க, தூயவர் மலர் தூவ, மங்கையர் வாழ்த்துப் பாட, மறையவர் வேதம் ஓத, சங்கொலி மங்கலம் காட்ட, திருவஞ்சைக்களம் என்ற வஞ்சியின் மூன்றாம் சேரமானாகப் பாஸ்கர ரவி வர்மன் தலையில் மணி மகுடம் ஏறிற்று.

அந்த மகுடத்தை அவன் சரிசெய்து கொண்டபோது, அது தவறிக் கீழே விழுந்தது.

அதே நேரத்தில் அரபிக் கடலில் மிதந்து கொண்டிருந்த அந்தப் பாய்மரக் கப்பல், ஓர் ஆட்டம் போட்டு அமைதி கொண்டது.

மகுடம் கீழே விழுந்ததும் சமய நம்பிக்கை மிக்க நாராயண நம்பூதிரி கலங்கினார்.

''தவறுவது நன்மைக்கே'' என்றான் ரவிவர்மன்.

விக்கிரம சோழன் ரவிவர்மனைக் கட்டித் தழுவி வாழ்த்தினான்.

கொங்கு மன்னன் மல்ல தேவன் அவன் காலைத் தொட்டு வணங்கினான்.

வரகுண பாண்டியன் தோல்வியுற்றிருந்ததால், பதினெட்டு ஆண்டுகளே நிரம்பப்பெற்ற அவனது இளவல் சீர்மாறன் சீர்வல்லபன், ஐம்பெருங்குழுவினரோடு வந்திருந்துவாழ்த்தினான்.

அந்தப்புரத்துக்கு அழைத்துப் பத்மாவதியை உச்சி மோந்து கொஞ்சினாள் மெல்லிளங்கோதை.

அப்போது பத்மாவதியின் தலையிலிருந்த மலர் சரிந்து கீழே விழுந்தது.

அப்போதும் அரபிக் கடலில் அந்தக் கப்பல் மிதந்து கொண்டிருந்தது. பகவதி

அம்மனின் சிவப்பு மூக்குத்தி ஜொலித்தது.

அங்கே யாத்திரீகர் கூட்ட நெரிசல் அதிகமாகக் காணப்பட்டது.

மன்னரும் மகாராணியும் அங்கு பூஜைக்கு வந்தபோது, கோவில் காப்பாளர்ஒருதட்டு குங்குமத்தை நீட்டினர்.

பத்மாவதியும் மெல்லிளங்கோதையும் தாவளி சகோதரிகளும் அந்தக் குங்குமத்தை அணிந்தபோது, மூத்த தாவளியின் நெற்றியில் அது பவளம் போல் பிரகாசித்தது. பத்மாவதியின் நெற்றியில் அது அலங்கோலமான கோடாக விழுந்தது.

அப்போதும் அரபிக் கடலில் அந்தக் கப்பல் அழகாக மிதந்து கொண்டிருந்தது!

முடிசூட்டு விழாவுக்கு முந்திய பூஜையில் பத்மாவதியின் நெற்றியில் குங்குமம் சரியாக ஒட்டாததை, கவனித்திருந்த நாராயண நம்பூதிரி இப்போதும் அதைக் கவனித்தார்.

இறைவனையே அவர் மனத்துக்குள் தியானித்தார்.

விக்ரம சோழனும், சோழமாதேவியும் வெற்றிப் பெருமிதத்தோடு காணப்பட்டனர்.

மூன்று தினங்கள் திருவஞ்சைக்களம் அல்லோலகல்லோலப்பட்டது.

அரண்மனை இரவு பகலாக ஆனந்த மயமாக இருந்தது.

நாலாவது நாள் அனைவரும் பரிவாரங்களோடு நூற்றிருபது ரதங்களில் வேணாட்டுக்குப் புறப்பட்டார்கள்.

பொலிவு மிக்க புதிய அரண்மனையில் மார்த்தாண்ட வர்மனும் மெல்லிளங்கோதையும் குடிபுகுந்தார்கள்.

புதிய தலைநகரமான திருவிதாங்கோட்டின் புதிய மன்னன் என்ற முறையில் மார்த்தாண்ட வர்மனை உதய மார்த்தாண்ட வர்மன் என்று அந்தத் தலைநகர மக்கள் அழைத்தார்கள்.

மலையடிவாரத்தில் கட்டப்பட்ட பத்மநாபபுரம் கோட்டை படை வீரர்களால் நிரப்பப்பட்டது.

வேணாட்டு பத்மநாப சுவாமி கோவிலில் மார்த்தாண்ட வர்மனின் மணி மகுடம் பூஜை செய்யப்பட்டது.

புதிய மன்னனுக்கு மரியாதை தெரிவிக்கும் வகையில் கோவிலுக்குள் செல்லும் தெய்வ பக்தியுடையோர் அனைவரும் மேலாடையைக் கழற்றி விட்டுச் செல்லும் பழக்கம் அன்றுதான் ஏற்பட்டது.

திருவிதாங்கோட்டிலும் முடிசூட்டு விழா கற்பனை செய்ய முடியாத அற்புதத் திருவிழாவாக அமைந்தது.



இங்கே மெல்லிளங்கோதையை உச்சி முகந்து குங்குமம் அணிந்து விட்டாள் பத்மாவதி.

சிவந்த அந்த முகத்தில் அது காலைச் சூரியன் போல் பிரகாசித்தது.

இரண்டு நாடுகளுக்கும் பிரதான அமைச்சராக விளங்கிய நாராயண நம்பூதிரி யானையின் மீது அமர்த்தப் பட்டு ஊர்வலமாக அழைத்து வரப் பட்டார்.

வஞ்சியின் மன்னனும், மகாராணி யும், வேணாட்டு மன்னனும் மகா ராணியும் அந்த ஊர்வலத்தில் நடந்தே வந்தனர்.

ஊர்வலம் முடிந்தபோது மேற்குக் கடலில் கதிரவன் மூழ்கத் தொடங் கினான். இருள் பரவத் தொடங்கிய அந்தநேரத்தில் அராபிய பாய்மரக் கப்பல் சேர நாட்டுக் கடற் கரை மண்ணில் மோதி நின்றது.

சேர நாட்டின் புதிய வரலாறு முழு வதையும் எழுதுவதற்கு அந்தக் கப்பல் வந்ததோ என்னவோ?

அந்தக் கப்பலிலிருந்து நாற்பது வய தான மகம்மதுவும் அவரது பேகமும் அவர்களது ரத்தினச் சிலை சலீமாவும் சேர நாட்டு மண்ணை மிதித்தார்கள்.

**இரண்டாம் பாகம் முற்றிற்று**

---

சரஸ் என்னும் சொல்லுக்குக் கஞ்சா என்று பொருள். போதை தரும் இப்பொருளைக் கடத்திச் சிமாருக மூவரும் ஒரு குழுவைச் சுற்றி வலைவரும் கதை. ஸ்ரீ ராமானந்த ஸாகர் வெளிநாட்டுச் சூழலை வெகு நேர்த்தியாகக் கையாண்டு பார்ப்பவர்களை இறங்க வைத்துள்ளார். காமிரா இதற்குக் கை கொடுத்துள்ளது. அந்தப் பெருமையைத் தட்டிக் கொண்டு போகிறவர்கள் ஸ்ரீ பிரேம்சாகரும் பாபுபாய் மிஸ்திரியும். இசை ஓரளவு - ஆம், ஓரளவுதான்,- புகழைப் பெறுகிறது என்றால் அதற்குக் காரணம் லக்ஷ்மிகாந்த் பியாரேலால்.

இந்த நடிப்பு எங்களுக்குப் புதிதல்ல, ஊதித் தள்ளிவிட்டோம் என்று பெருமைப்பட்டுக் கொள்ள லாம் தர்மேந்திராவும் ஹேமாமாலினியும். என்று லும் அருணா ஈரானி 'நான் என்ன சோடையா?' என்று கேட்கிறதுபோல் முன் நிற்கிறார்.

கேஷ்தோ முக்கர்ஜியும் அஸ்ராணியும் நகைச் சுவையைக் கேலிச்சுவையாக்கிச் சிரிக்க வைக்கின்ற னர். அஜீத்துக்கு ஏற்ற பாத்திரத்தையே ஏற்றும் அலுக்காதது அதிசயம்.

ஸ்ரீ ராமானந்த சாகரின் கதை நூறோடு நூற் றொன்றாகச் சேர்த்துக் கொள்ளத்தக்கதுதான் என்று லும், ஆடம்பர செட்டுக்களையும், நடனக் காட்சிகளை யும் கடல் குகை போன்ற காட்சிகளையும் புகுத்திப் பார்ப்பவர்களை மயக்குகிறார்.

பார்ப்பவர்களின் போதை தெளிந்தாலன்றி, இத்தகைய படங்களிலிருந்து விடிவு ஏற்படாது

--ரா. வீ.



# சுத்தமான காப்பியிலிருந்து தயாராகும் ஒரே ஒரு இன்ஸ்டன்ட் காப்பி

# இதுதான்.




மன நிறைவு தரும்
மணமும் சுவையும் மிக்க
தரமான தென்னிந்திய
காப்பிக் கொட்டை
யிலிருந்து தயாராகிறது
நெஸ்கஃபே. 100%
சுத்தமான காப்பி.
ஆகவே தான் மற்றெந்த
இன்ஸ்டன்ட் காப்பியையும்
விட அதிகமாக திருப்தி
படுத்துகிறது நெஸ்கஃபே.

## நெஸ்கஃபே®

—100% சுத்தமான காப்பியிலிருந்து தயாராகும்
இன்ஸ்டன்ட் காப்பி இது ஒன்றே.



உலகெங்கும்
அதிகமாய்
விற்பனையாகும்
இன்ஸ்டன்ட் காப்பி

A NESTLÉ product

NNCM-22 TAM

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

## குவாலியர் ரேயான்—

### தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

# எனக்குத் தெரியுமே நம்பகமானது க்ளைகோடின்–

பாழும் இருமல் இவரை விரைவில் விட்டகல...






## இந்தியாவின் வேறெந்த இருமல் மருந்தையும் விட அதிக அளவிலே இருமலை நிறுத்தியுள்ளது க்ளைகோடின்.

## எனவேதான் அது முதல்தரமானது.

இருமல் பாதித்த எல்லா உறுப்புகளிலும் அது விரைந்து செயல்பட்டுத் தவறாமல் துரிதமான ஆறுதல் அளிக்கிறது.

- தொண்டைக் கமறலுக்கு இதமளிக்கிறது.
- ஜலதோஷத்தோடு வரும் இருமலை விலக்கிச் சளியடைப்பைத் தளர்த்துகிறது.
- நிம்மதியான உறக்கத்தைத் தூண்டி, மார்புத் தசைகளை இளைப்பாற்றி மூச்சு விடுதலை எளிதாக்குகிறது.

எவ்வித இருமலையும் முழுதும் கட்டுப்படுத்த உறுதுணை க்ளைகோடின்.




க்ளைகோடின்—இந்தியாவில், இருமலை முறியடிக்கும் சேம்பியன்—நம்பகமான மருந்துகளை நமக்குத் தரும் அலெம்பிக் நிறுவனத்திடமிருந்து.

everest/520/ACW-1m

யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கும் ஒரு காலம் வரும் என்று சொல்வது என்னவோ உண்மை. ஆயினும் மாங்கொட்டைக்கு இப்படி ஓர் ஒளிமயமான எதிர் காலம் இருக்கப் போகிறது என்று ஒரு ''மா''மேதைகூடச் சிறிது காலத்துக்கு முன் எண்ணியிருக்க மாட்டார்!

மாங்கொட்டையிலிருந்து ஒருவித எண்ணெய் எடுக்க ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு வந்தன என்ற பேச்சு சில காலமாகவே அடிபட்டுக் கொண்டிருந்தது. ஆனால் இவ்வளவு சீக்கிரம் மா. கொ. எண்ணெய் தயாரிப்பதற்குத் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுவிட்டன என்பது ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? ராயப்பூரில் (மத்தியப் பிரதேசம்) உள்ள ''ஹனுமான் வைடமின் ஃபுட் ப்ராடக்ட்ஸ்'' நிறுவனம் வெளியிட்டுள்ள விளம்பரத்தைப் பாருங்கள்!

விளம்பரம்

''தேவை : மாங்கொட்டைகள்''

ரூ. 20,000 பரிசுத் திட்டம்
(அக்டோபர் 15உ வரை மட்டும்)

முந்துங்கள். கீழ்க் கண்டவாறு மாங்கொட்டை சப்ளை செய்து அதற்கான பரிசைப் பெற முந்துங்கள்.

1000 க்விண்டால் சப்ளை செய்தால்
பரிசு ரூ. 2500

5000 க்விண்டால் சப்ளை செய்தால்
பரிசு ரூ. 20000

இதற்கு மேலும் சப்ளை செய்பவர்களுக்குடன் ஒன்றுக்கு ரூ. 25 சதவீதம் பரிசுகளும் உண்டு.

தேசபந்து (ராயப்பூர்) 21–7–76

இதைப் படித்தது முதல் என் வால்கள் பள்ளியிலிருந்து வந்ததும் ஆளுக்கு ஒரு மாம்பழத்தைக் கையில் கொடுத்து, ''எங்காவது கண்காணாமல் தின்னுட்டு வாங்க'', என்று அவள் சொல்வதில்லை. ''இங்கேயே தின்று விட்டுக் கொட்டையை அந்தப் பாத்திரத்தில் போட்டு வையுங்கள்'' என்கிறாள். ''கர்மம், கர்மம்'' என்று தலையில் அடித்துக் கொண்டே வரும் என் தாயார், ''கொட்டைகளை நன்றாகக் கழுவிவிட்டு அதில் போடுங்கள். இந்த எண்ணெயால்தான் சோப்புப் பண்ணுகிறார்களாம்'' என்று கூறி விட்டு, ''இனிமேல் எந்தச் சோப்பையும் சமையல் அறையில் வைக்காதீர்கள். மற்றச் சாமான்களுடன் சோப்பையும் ஒரே பையில் போட்டுக் கொண்டு வராதீர்கள்'' என்று எமர்ஜன்ஸி வந்த புதிதில் இட்ட சட்டங்கள் மாதிரி வரிசையாகச் சொல்லிவிட்டு நகர்கிறாள். என் பெண் ஒரு மாம்பழப் பைத்தியம். ''அப்பா, இனி மாங்கொட்டை கூட விலை போய் விடும். ஆகவே எங்கள் கோட்டாவை இரட்டிப்பாக்கி விடுங்கள்'' என்று நச்சரிக்கிறாள். இவ்வளவு தூரம் போவானேன். உலகத்தில் உள்ள அத்தனை நிறுக மாம்பழங்களின் பெயர், ரகம், ருசி இத்தனையும் அலசி எடுக்கிற என் தந்தையே தலைகீழாக மாறி விட்டார் என்றால் பாருங்களேன்!

ஆனால் அவர் சொல்வதிலும் நியாயம் இருப்பது தெரிகிறது. ''கொட்டை சிறிதாக உள்ள பழமாகப் பார்த்து வாங்கி வா'' என்பதற்குப் பதில், ''நல்ல பழமா, பெரிய கொட்டை இருக்கிறதாப் பார்த்து வாங்கி வா'' என்கிறார்! என்றாலும் ஆவக்காய் மாங்காய் இனி கிடைக்குமா என்று சந்தேகமாயிருக்கிறது. பக்கத்து வீட்டு சீனு (எகனாமிக்ஸ் ஃபைனல்) சொல்வதும் சரியாகப் படுகிறது: ''புதிய கண்டுபிடிப்பால் சோப்பு தயாரிப்புக்குத் தேங்காய்எண்ணெய் உபயோகப்படுத்துவது குறையும். ஆகவே தேங்காய் எண்ணெய் விலை திடுதிடுவெனச் சரியும். இதுவரை மாங்கோ ஜூஸ் தயாரிப்பாளர்கள் கொட்டைகளைத் தூக்கி எறிந்து வந்தார்கள். இனி அதற்கு விலை உண்டாதலால் ஜூஸ் விலையைச் சற்றுக் குறைப்பார்கள் என்று எதிர்பார்க்கலாம்.''

என் மனைவி ரொம்ப ஸ்மார்ட். இதைக் கேட்டதும் வாசலுக்குப் போய் ஜூஸ் வகுப்புக்குப் போய்க் கொண்டிருக்கும் என் பெண்ணைக் கூப்பிட்டு, ''இந்தப் பையை எடுத்துக் கொண்டு போ. வரும்போது மாங்கொட்டைகளைத் தூக்கி எறியாமல் கொண்டு வா'' என்கிறாள்.

சீனு தொடர்கிறான்: ''இனி ஏற்றுமதி வியாபாரத்திலகூட சலுகை காட்டலாம். மாம்பழம் விலை இவ்வளவு, இதன் கொட்டைகளைத் திரும்ப இந்தியாவுக்கு அனுப்ப ஒப்புக் கொண்டால் சலுகை இவ்வளவு என்று அறிவிக்கலாம்.''

எல்லாவற்றையும் விட என் பாட்டியின் கவலையே அலாதி. ''போச்சு, இந்தத் தலைமுறையுடன் போச்சு'' என்றாள். ''அந்தக் காலத்தில் அடிக்கடி மாங்கொட்டைக் குழம்பு பண்ணிப் போடுவோம். இப்ப என்னடான்னா அது விற்கிற விலையில் மாங்கொட்டைக் குழம்புக்கு எங்கே போகிறதுன்னு கேக்கிறே!''

— நடனம்



# தேவை: மாங்கொட்டை!



# சிலம்புச் செல்வம்

ம.பொ.சி

காப்பியத்தின் தொடக்கத்திலே கடவுள் வாழ்த்து பாடுவது இலக்கிய மரபு. கவிஞர் இளங்கோ, அந்த மரபைக் கடைப்பிடிக்கவில்லை. தாம் படைத்த சிலப்பதிகாரக் காப்பியத்திலே இறையருளைப் போற்றுது, திங்கள் ஞாயிறு — மாமழை ஆகிய இயற்கைச் சக்திகளைப் போற்றுகிறார். ஒவ்வொன்றையும் ஒரு முறைக்கு இரு முறை போற்றுகிறார். ''திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்'' என்று தொடங்குகிறார்.

இளங்கோ தெய்வ நம்பிக்கை இல்லாதவர் அல்ல. சிவபெருமானைச் சொல்லுங்கால், ''பிறவா யாக்கை பெரியோன்'' என்றும், ''நுதல் விழி நாட்டத்து இறையோன்'' என்றும் நூலினுள்ளே பக்தியோடு குறிப்பிடுகின்றார். காப்பியத்தின் இறுதியிலும், ''மல்லன்மா ஞாலத்து வாழ்வீர்'' என்று உலகோரைக் கூவி அழைத்து, ''தெய்வந் தெளிமின்; தெளிந்தோர் பேணுமின்'' என்று அறிவுரை கூறுகின்றார்.

தெய்வ நம்பிக்கை உடையவராக இருந்தும் காப்பியத்தின் தொடக்கத்திலே கடவுள் வாழ்த்துப் பாடாததேன்? அதற்குக் காரணம், காப்பியத்தின் தலைவியான கண்ணகியே ஒரு தெய்வமாக இருப்பதுதான். பத்தினித் தெய்வத்தின் காப்பியத் தொடக்கத்திலே பரம்பொருளையும் போற்றி வழிபடத் தயங்குகின்றது இளங்கோவின் உள்ளம். அவரும் கண்ணகி பக்தர்; காப்பியத்தின் இறுதியிலே தாமும் கண்ணகியின் தெய்வப் படிமத்தின் முன் சென்று, அப்பத்தினிக் கடவுளை வழிபடுகின்றார். பரம்பொருளேயானாலும் பத்தினியர்க்குச் சமமாவதில்லையென்பது இலக்கிய மரபு. அதனால்தான், தெய்வந் தொழாத கற்பு தமிழர் பண்பாயிற்று. கவுந்தியடிகளும், ''கற்புக்கடம் பூண்ட இத்தெய்வமல்லது, பொற்புடைத் தெய்வம்யாம் கண்டிலமால்'' என்கிறார் அல்லவா?

காப்பியத்தின் தொடக்கத்திலே கண்ணகித் தெய்வத்துக்கே இளங்கோ வாழ்த்துப் பாடியிருக்கலாம். அவர் அப்படியும் செய்யவில்லை. சிலப்பதிகாரத்தில்தான் முதன் முதலாகக் கண்ணகி தெய்வம் அறிமுகமாகிறாள். அதிலும், கதையின் இறுதியிலேதான் அவள் தெய்வமாகிறாள். ஆகவே, காப்பியத்தின் தொடக்கத்திலேயே கண்ணகிக்கு வாழ்த்துக் கூறிக் கதையைத் தொடங்குவது நாடக மரபுக்குப் பொருந்தாது.

திங்கள் — ஞாயிறு — மாமழை — மாநிலம் ஆகியவற்றையும் தெய்வங்களாகக் கொண்டு வழிபடுவது தமிழர் மரபு. அதனால், அந்த இயற்கைச் சக்திகளைப் போற்றுவது ஒரு வழியில் மறைமுக இறைவழிபாடாக அமையும் என்று இளங்கோ கருதியிருக்கலாம்.

அந்த இயற்கை வழிபாட்டிலும் அரச வழிபாட்டைக் கலந்து விடுகிறார் இளங்கோ. திங்களானது சோழனுடைய வெண்கொற்றக் குடை போன்றிருப்பதால், அதனைப் போற்றுவோமாக! — என்கிறார். ஞாயிற்றை சோழனுடைய ஆக்ஞா சக்கரத்துக்கும், மாமழையை அவனுடைய வள்ளண்மைக்கும் உவமை கூறிப் போற்றுகின்றார்.

இளங்கோ கடைப்பிடிக்கும் இந்த முறை காப்பிய உலகில் ஒரு புது முறையாகும். உலகம் முழுவதையும் தாயகமாகக் கொள்வது தமிழர் மரபு. இந்த மரபையொட்டி, சிலப்பதிகாரக் காப்பியத்தின் முதல் பத்தொன்பது வரிகளை உலகம் முழுவதையும் போற்றும் சர்வதேசக் கீதமாக அமைத்துள்ளார். இந்த வரிகளிலே உலகனைத்துக்கும் பொதுவான திங்கள், ஞாயிறு, மாமழை ஆகியவற்றைப் போற்றுகின்றார். நிலம் முழுவதையும் நெஞ்சில் நினைத்துக் கொண்டு — புகார்க் காண்டத்துக்குப் பொருந்தும் வகையில் — பூம்புகாரைப் போற்றுகின்றார். உலகில் மிகப் பெரியதாக மதிக்கப்படும் மேரு மலையைச் சிறப்பித்துப் போற்றுகின்றார்.

புறநானூற்றுள் கணியன் பூங்குன்றனார், ''யாதும் ஊரே; யாவரும் கேளிர்'' என்று பாடினார். இந்த ஒரு பாட்டைத்தான் அவர் பாடி வைத்துப் போயுள்ளார். அந்தப் பாட்டு அழியாப் பெருவரம் பெற்றுவிட்டது. இந்தப் பாட்டின் முதல் வரியாக அமைந்துள்ளது ''யாதும் ஊரே; யாவரும் கேளிர்'' என்னும் பொன்மொழி. புலவர்களிலேயும் பலருக்கு இந்த ஒரு வரிதான் நினைவில் இருக்கும். மற்ற வரிகளை மறந்துவிடுமளவுக்கு இந்த வரி தமிழர் நெஞ்சங்களிலே நிறைந்தது.

மாஸ்கோ நகரிலிருந்து பேசிய பிரதமர் இந்திரா காந்தி புலவர் பூங்குன்றனாரின் பொன்மொழியை உலகுக்கு நினைப்பூட்டியது தமிழரைப் பெருமைப்படுத்தியதாகும். ஓர் இந்தியக் கவிஞரின் பொன்மொழி என்று அவர் பொதுப்படையாகச் சொல்லியிருக்கலாம். உலகோர் பார்வையிலே பூங்குன்றனார் இந்தியக் கவிஞர்தானே! அப்படிச் சொல்லாமல், ஒரு தமிழ்க் கவிஞர் என்று சொன்னது தமிழரைப் பெருமைப்படுத்தியதாகும். பூங்குன்றனாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றித்தான் சிலப்பதிகாரத்தின் தொடக்க வரிகளை உலகப் பாட்டாக அமைத்தார் இளங்கோவடிகள். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினுல் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. மிருது மென்மை கொஞ்சும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லிண்டாஸ்-PS. 56-140 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசா காசு

